நீலகிரி மாவட்டத்தில் கல்கி – 1

KALKI 22.11.87 ரூ. 2.

# கல்கி





"சதிவேலை" என்கிறார் அமைச்சர். "அதெல்லாம் ஒன்று மில்லை; பாலம் பலவீனப்பட்டு, இடிந்து போயிருந்தது; அது தெரிய வந்தால் ரயில்வே துறை பொறுப்பேற்க நேரும்; அதனால் இப்படி கவனம் திசை திருப்பி விடப்படுகிறது" என்கிறது ரயில்வே போலீஸ்! ஆக மொத்தம், ரயில்கள் வேகப்படுத்தப்பட்டாலும் அதற்கேற்ப ரயில் பாலங்களும் தண்டவாளங்களும் பலப்படுத்தப்படவில்லை என்பது தெளிவு. இத்தகைய ஆபத்தான சூழலில் பயணிகள் பலி ஆடுகளாகி ளார்கள். பதின்மூன்று பெட்டிகள் கவிழ்ந்தும் இருவர் மட்டுமே மரணமடைந்தது பேரதிர்ஷ்டமே. ஐ.ஸி.எஃப் தயாரித்த எஃகுப் பெட்டிகளின் உறுதியும் இறைவன் கருணையுமே காரணங்கள். விபத்தில் தப்பிப் பிழைத்த ராஜராஜசோழன் கூறுகிறார்:

# "தடம் புரண்ட ரயிலில் தப்பிப் பிழைத்தேன்!"

எல்லாருமாய்ச் சிரித்துப் பேசிக்கொண்டு, பயணம் ஜாலியாய்த்தான் இருந்தது. என் நண்பர் பத்மநாபனும் நானும் அரட்டை அடித்தபடி, தமாஷாய்ச் சிட்டாடிக் கொண்டிருந்தோம்.

எதிர்சீட்டில் உட்கார்ந்திருந்த பெண், தன் பாட்டியிடம், "பாட்டி! இந்த ரயில் இத்தனை வேகமாய்ப் போறதே! எனக்கு ரொம்பப் பயமாய் இருக்கு பாட்டி!" என்றாள். நான், "தமிழ்நாடு எக்ஸ்பிரஸ் வழக்கமாய்ப் போகிற ஸ்பீடுதான் இது. இந்த ரயில் ஓட ஆரம்பித்து, இத்தனை வருஷத்தில் ஒரே ஒரு தடவைதான் விபத்து நடந்திருக்கிறது! எனவே, பயப்படத் தேவையில்லை. ஒன்றும் ஆகாது!" என்று சமாதானம் சொன்னேன்.

சில விநாடிகள்தான் ஆகியிருக்கும். ரயில் ஒரு சிறிய பாலத்தைக் கடந்து கொண்டிருந்தது. திடீரென தூக்கிப் போட்டது. உள்ளே இருந்த அனைவரும் குலுங்கினார்கள். அடுத்த நிமிடம் ரயில், பாதையில் போட்டிருந்த ஜல்லி மீது கொஞ்ச தூரம் ஓடி, உருண்டு அடித்துக் கொண்டு, கீழே விழுந்தது.

தூங்கிக் கொண்டிருந்த பலர், இசகுபிசகாய் விழுந்தனர். எங்கள் பெட்டி, இரண்டு, மூன்று முறை உருண்டது. நாங்களெல்லாம், கம்பார்ட்மெண்டின் தரைக்கும், மேல் கூரைக்குமாய் உருட்டப்பட்டோம். என் மண்டை, மேல் கூரையில் பொருத்தப்பட்



டிருந்த மின்விசிறியில் போய் இடித்தது. நான் மயக்கமடைந்தேன்.

கண்விழித்துப் பார்த்தபோது, ஒரே அழுகைக்குரல். கேட்கவே என்னவோ போல இருந்தது. என் உடல் மேலே இன்னொரு பெண்மணி மூர்ச்சையடைந்த நிலையில். அவருடைய உடலை நகர்த்திவிட்டு, என்னை விடுவித்துக் கொள்ள முயற்சி செய்தேன். முடியவில்லை. ஒரு மாதிரியாய்ச் சுதாரித்துக் கொண்ட நண்பர்தான் எனக்கு உதவி செய்தார்.

எனக்குத் தலையில் அடி. லேசாய்த்தான் வலி. கால் மூட்டியில் சிறு காயம். மற்றபடி பெரிதாய் ஒன்றுமில்லை. கம்பார்ட்மெண்டை விட்டு வெளியேறி, மெதுவாய் நடந்தோம்.

ஐயோ! என்ன கொடுமை! வரிசையாய்ப் பெட்டிகள் தடம் புரண்டிருந்தன. பெட்டிகள் வண்டியிலிருந்து கழன்றுவிட்டதை அறிந்த உடனே டிரைவர், பிரேக் பிடித்தாராம். ஆனாலும் அத்தனை வேகத்தில் வந்ததால் வெகுதூரம் போய்த்தான் வண்டி நின்றது.

ஆபத்தான அந்த வேளையில் உதவிக்கு ஓடிவந்த கிராமவாசிகளுக்கு நன்றி சொல்ல வேண்டும். திபுதிபுவென அவர்கள் வந்து பெட்டிகளில் சிக்கிக் கொண்டவர்களை மீட்பது, தண்ணீர் கொடுப்பது, மூர்ச்சை தெளிவிப்பது என்று பணியாற்றினர். உடன் வந்த நாக்பூர் எம். பியான பன்வாரிலால் புரோஹித் வேலைகளை மேற்பார்வையிட்டார். ரயிலில் கூடவந்த ஜவான்களும் உதவினார்கள். சுமார் இரண்டு மணி நேரத்தில் டாக்டர்களும் வந்து மருத்துவ வசதிகளைச் செய்து கொடுத்தனர்.

காயமுற்றவர்கள் ரிலீஃப் வண்டிக்குக் கொண்டுவரப்பட்டனர். அங்கே நிறையப் படுக்கை மற்றும் ஸ்டிரெச்சர்கள் இருந்தன. அடுத்த ஸ்டேஷன் வந்ததும், சீரியஸாய் அடிபட்டவர்களை விரைவாகச் சாலை மூலமாய் நாக்பூருக்குக் கொண்டுபோக ஏற்பாடு செய்தனர். மற்றவர்கள் ரிலீஃப் ரயிலில் நாக்பூரை அடைந்தபோது, டாக்டர்கள் தயாராய் இருந்தனர். அங்கிருந்து பயணிகள் தங்கள் வீட்டுக்குத் தந்தி தர இலவச ஏற்பாடுகள் செய்திருந்தார்கள். நான் என் வீட்டுக்கு, ''நான் நலம். பயப்பட வேண்டாம்,'' என்று தந்தி கொடுத்தேன்.

ஒருவழியாய் ரிலீஃப் ரயிலும், தமிழ்நாடு எக்ஸ்பிரஸின் தடம்புரளாத பகுதியும் இணைக்கப்பட்டு, சனிக்கிழமை இரவு இரண்டேகாலுக்கு சென்னையை நோக்கிப் புறப்பட்டது. ஒவ்வொரு ஸ்டேஷனிலும், மைக்கில் ''டாக்டர், தயாராய் இருக்கிறார். மருத்துவ உதவி தேவைப்படுவோர் அணுகலாம்.'' என்று அறிவித்தனர். அழைக்கப்பட்டபோது டாக்டர்கள் ரயில் பெட்டிக்கே வந்து காயமுற்றவர்களைக் கவனித்தனர்.

சென்னையை அடைந்தபோது இரவு மணி பதினொன்றே முக்கால். பயணிகளைச் சந்திக்க வந்த உறவினர்களில் அழாதவர்களே கிடையாது! கண்டத்திலிருந்து தப்பிய பெரு மகிழ்ச்சி கூட கண்ணீரைத் தருவிப்பதைப் பார்த்தேன்.

வீடு போய்ச் சேர்ந்தேன். காலையில் எழுந்தேன். தந்தி ஊழியர் வந்து ஒரு தந்தியை என்னிடமே கொடுத்துச் சென்றார். நலமாய் இருப்பதாக நான் வீட்டுக்கு அனுப்பின தந்தி!

பேட்டி: **எஸ். சந்திரமௌலி**

---

ஈரோடு ஸ்டேட் பேங்க் ஆப் இந்தியா கிளையில், மருந்து வங்கி என்று பெயரிட்டு ஒரு சிறிய மரப்பெட்டியை வைத்துள்ளனர். இதில் வாடிக்கையாளர்கள் தங்களிடமுள்ள உபயோகிக்காத, காலக்கெடு முடியாத மருந்துகளைக் கொண்டு வந்து சேர்க்குமாறு வேண்டுகோளும் எழுதி வைத்துள்ளனர். இப்படிச் சேரும் மருந்துகள் சமூக சேவை ஸ்தாபனங்களின் மூலம் ஏழை நோயாளிகளுக்கு விநியோகிக்கப்படுகின்றன.

— துடுப்பதி வெங்கண்ணா.






கன்னட நடிகர் ராஜ்குமார் தமது ஒவ்வொரு பிறந்தநாளின் போதும் இரத்த தானம் செய்வதையும், மோடியின் கண் மருத்துவமனையில் இலவச மூக்குக் கண்ணாடிகள் வழங்குவதையும் வழக்கமாகக் கொண்டுள்ளார். இவரைப் பின்பற்றி இவரது விசிறிகளும் இரத்ததானம் செய்து வருகின்றனர். இந்த வருடம் நவம்பர் முதல் தேதியன்று ராஜ்குமார் ரசிகர் மன்றத்தினர் சுமார் இரண்டாயிரம் பாட்டில்கள் இரத்தம் வழங்கினர்!

— கே.ஜி.எஃப். பழனிச்சாமி.



* துயரில் ஆழ்ந்த குடும்பம்: லட்சுமி பாட்டி, பாப்பா — தாயார், தங்கை மாரியாயி.



* புத்திர சோக ராமன்.

# ஆதரவு கேட்டு ஓர் ஆராய்ச்சி மணி!

ராமன் தலை நிமிர்ந்தான். பறித்துக் கொண்டிருந்த காட்டுக் கிழங்குகளைப் பக்கத்தில் வைத்தான். ஓடையில் நீர் குடித்தான். அங்கிருந்து கீழே பார்த்தான். நூறடி கீழே வரிசையாய் மங்களூர் ஓடு வேய்ந்த வீடுகள் தெரிந்தன. அந்த வீடுகளுக்கு வெளியே சட்டை போடாத ஆண்கள் ஒன்றுகூடிப் பேசிக் கொண்டிருந்தார்கள். ஏதோ விஷயம் இருக்கிறது போல.

ராமன் கீழே இறங்கினான். ஒற்றையடிப் பாதையில் தன் வீட்டைக் குறி வைத்து ஏறக்குறைய ஓட்டமாய் இறங்கினான். வீட்டை நெருங்கினான். வீட்டு வாசலில் பாப்பா நின்றிருந்தாள். முகத்தில் நீண்ட நாட்களுக்குப் பிறகு சிரிப்பு.

''என்ன பாப்பா.. ஒரே குஷியா இருக்காப்பல இருக்கு?''

''இன்னிக்கு நாம சோறு சாப்பிடப் போறோம்'' என்றாள் பாப்பா.

ராமன் கையிலிருந்த காட்டுக் கிழங்கைப் பார்த்தான். பாப்பாவைப் பார்த்தான்.

''என்ன சொல்றே?'' என்று புரியாமல் அவளைக் கேட்டான்.

''ஸில்வர் கிளவுட்ல ஆரஞ்சு பறிக்கணுமாம். ஆளுங்கள வரச் சொல்லி இருக்காங்க. ஒரு பத்து ரூவா பாக்கலாம் இன்னிக்கி'' என்றாள் பாப்பா.

''அப்படியா! அதான் நம்ப ஆளுங்க எல்லாம் வெளிய நின்னுகிட்டிருக்காங்களா... இந்தா இந்தக் கெளங்கை வேக வெச்சிக் குடு. அப்படியே சடையனையும் கூப்புடு. ரெண்டு பேருமாய் போயிட்டு வரோம். சாயங்காலம் வரப்ப அரிசி, புளி வாங்கிட்டு வந்துடறோம். ராத்திரி ஒரு புடி புடிச்சிரலாம்.

ராமனை உற்சாகம் தொற்றியது. கிட்டத்தட்ட மூன்று மாதங்களாக வேலை இல்லை: குடும்பத்தில் இருக்கும் அத்தனை பேரும் காட்டுக் கிழங்கைத்தான் சாப்பிட்டாகிறது.

''சடையா... டேய் சடையா'' ராமன் குர



கணவன் : அதிகாலையிலேயே எழுந்து அரை மணி நேரமா அலங்காரம் பண்ணுறியே! எங்க போறதா உத்தேசம்?

மனைவி : வேலைக்காரி வரல, அதான் பால் வாங்கிட்டு வரலாம்னு புறப்பட்டுக்கிட்டிருக்கேன்...

— மணியன் தர்மலிங்கம்.

---

வில் உற்சாகத்தை ஏற்றிக் கொண்டு இரைந்தான்.

''போலாம்பா'' என்று சடையாண்டி எதிரில் வந்து நின்ருன். கருப்பான முகம்தான். ஆனால் களை சொட்டியது. சரியாக சீவப்படாத முடிதான். ஆனால் சுருண்டு சுருண்டு நெற்றியில் புரண்டது. சடையனுக்கு மீசை அரும்பி இருந்தது. எதிரில் அவன் உற்சாகப் பந்தாக நிற்பதைப் பார்த்து ராமன் பெருமிதப்பட்டான்.

ராமன், மனைவி கொண்டு வந்த வெந்த கிழங்கை மகனுக்குக் கொடுத்தான்.

சாப்பிட்டார்கள். ஜில்லென்ற அருவி நீரை மொண்டு மொண்டு குடித்தார்கள்.

''வர்ரேம்மா'' என்ருன் சடையன்.

''வர்ரேம் பாப்பா. சாயங்காலம் சாப்பாடுதான்'' என்ருன் ராமன்.

வெளியில் ஜமா காத்திருந்தது.

புறப்பட்டார்கள்.

**அ**வர்கள் இருந்தது மாயார் பள்ளத்தாக்கின் சின்கோனு எஸ்டேட் காலனியில். அங்கிருந்து சில்வர் கிளவுட் எஸ்டேட்டை நோக்கி நடந்தார்கள். சரிவில் வேகமாகப் பட்டாளம் இறங்கியது. பாட்டும் கும்மாளமுமாக ஓர் ஏழு பேர் அடங்கிய குழு இரைந்து இரைந்து பேசிக் கொண்டே பாதையைச் சாப்பிட்டது. இருபுறமும் அடர்த்தியான காடு. சூழ்நிலையில் ஈரம், குளிர் காற்று லேசாக அணைத்து அணைத்து விலக, ஏறக்குறைய அவர்கள் ஸில்வர் கிளவுட் எஸ்டேட்டை நெருங்கி விட்டார்கள்.

இன்னும் ஒரு பத்திருபது அடிதான்.

சாலையோரம் மரஞ் செடிகளுக்கு நடுவில் ஒரு பெரிய கரிய பாறை இருந்தது. புதிதாய் இருக்கிறதே. இந்தப் பாறையை இதற்கு முன் பார்த்ததில்லையே. ஐயோ! அது பாறை இல்லை, யானை! அசைகிறது பார். யானை பிளிறியது. ஒற்றை யானை. தும்பிக்கையை ஆட்டிக் கொண்டு யானை அவர்களை நோக்கி ஓடி வந்தது.

''ஓடு....! ஓடு...!''

''சடையா. இப்படி வாடா.. டேய்!''

''ராமா! நீ மொதல்ல ஓடு!''

யானை நிலம் அதிர அதிர ஓடிவர, தகப்பனும் மகனும் அருகில் ஓடிய ஆற்றில் குதித்து உயிர் தப்பும் ஆசையில் ஆற்றை நோக்கி ஓட, சடையன் ஒரு கல் தடுக்கினுன். விழுந்தான்.

ராமன் இன்னொரு திசையில் ஓடி தடுக்கி விழ, முன் பற்கள் பெயர்ந்தன. விழுந்த ராமன் தலைநிமிர்ந்து பார்த்தான். 'ஐயோ!' என்று கத்தினுன்.

கீழே விழுந்திருந்த சடையனுக்கு வெகு அருகில் யானை நின்றிருந்தது. சடையன் சுதாரித்துப்பின்னால்பார்த்தான். அலறினுன். அதற்குள் யானை தன் காலை உயரத்தூக்கி, சடையனின் வயிற்றில் ஓங்கி ஒரு மிதி.... சதக்!

**ம**களைத் தம் கண் முன்னுல் யானைக்குப் பலி கொடுத்த ராமனை நாங்கள் சந்தித்து 'அன்றைக்கு என்ன ஆயிற்று?' என்று வினவியவுடன் தம் வயதை மறந்து, சுற்றுப்புறத்தை மறந்து குலுங்கிக் குலுங்கி அழத் தொடங்கினுர். அவரைச் சமாதானப்படுத்திப் பேச வைப்பதற்கு வெகு நேரமாயிற்று.

ராமன் இப்போதும் வேலையின்றி அவதிப்படுகிருர். எப்போதாவது தற்காலிகமாய்க் கிடைக்கும் வேலைகளைச் செய்து வீட்டுக்கு ஏதோ கொண்டு வருகிருர்.

ராமன் 'குறும்பர்' என்று சொல்லப்படும் மலைவாசி வகுப்பைச் சேர்ந்தவர். அவருடைய ஒரு பெண்ணை, கார்குடி பள்ளியில் சேர்த்து விட்டிருக்கிருர். பெண்ணுக்கு சாப்பாட்டுப் பிரச்னை இருக்கக் கூடாது என்பதற்காகவே.

இவர் வசிப்பது மாயார் பள்ளத்தாக்கில், அரசாங்கம் 'வேண்டாம்' என்று உதறிவிட்ட ஒரு பாழடைந்த வீட்டில். இவருடைய ஒரே மகன் காட்டு யானையால் மிதிபட்டு ஆஸ்பத்திரியில் சேர்க்கப்பட்டு உயிர்நிலை ஒரு கால் பந்தளவு வீங்கி உயிரிழந்தது 5.3.83 இல். குடும்பத்திற்கு வருமானம் செய்து தர வேண்டிய மகனை இழந்து தவிப்பதால் ராமன் அரசாங்கத்திடம் நஷ்டஈடு கேட்கிருர்.

'இந்த மாதிரி விபத்தில் இறப்பவர்களுக்கு நஷ்டஈடு தருவதற்கான ஆணை 15.9.84- முதல்தான் அமுலுக்கு வந்திருக்கிறது. உங்கள் மகன் இறந்தது 1983 -ல். எனவே நஷ்டஈடு கிடையாது' என்று சொல்லிவிட்டது அரசாங்கம்.

''ஒரு தடவை என்னை என் குடும்பத்தோட ஊட்டிக்கு வான்னு சொல்லிட்டாங்க. அதிகாரிங்களுக்கு என்னைப் பார்க்கணும்னு சொன்னுங்க. எங்கிட்ட காசு இல்லை. அதனுல சுத்தி இருக்கறவங்ககிட்ட அஞ்சு பைசா, பத்து பைசான்னு சேர்த்து வாங்கிட்டுப் போனேன். என்னை, என் குடும்பத்தாரை, எல்லாம் பார்த்துட்டு, 'சரி, போய்ட்டு வா'ன்னுட்டாங்க. மேல கூப்பிட்டுப் பார்த்தோட சரி. இதுதான் வரைக்கும் யாருமே எதுவுமே செய்யலை.''

கன்றிழந்த பசுவைப் போல் ராமன் இடைவிடாமல் ஆராய்ச்சி மணியை அடித்துக் கொண்டே இருக்கிருர். மனு ஆண்ட மண்ணில் மற்றொரு பரிதாபம். ஒரு மனிதாபிமானத்தின் பேரிலாவது அவருக்கு ஆதரவு கொடுத்தால் நன்ருக இருக்கும்.



# சட்டம் ஒரு விளையாட்டு

இதோ தியேட்டரில் அங்கங்கே ஜனங்கள் கூடி விட்டார்கள். படம் ஆரம்பிக்கப் போகிறது. சிறப்பு முன்னுரையாகக் கலைஞர் கருணாநிதி தம் கட்டைக் குரலில் செந்தமிழில் சப்பைக் கட்டுக் கட்டிவிட்டார். இனி எஸ். ஏ. சந்திரசேகரின் படம்:

ரவிச்சந்திரன் ஓர் எஸ். பி. இதோ சாஸ்திரிகளுக்கு எதிரே அமர்ந்து மனைவிக்குத் திதி கொடுப்பது பற்றிப் பேசும் காட்சியோடு படம் களைகட்டத் துவங்கி விட்டது... நெகடிவில் ஸ்ரீவித்யாவை யாரோ வில்லன் கத்தியால் குத்துவது போல் ஒரு ஸீன் வேறு. ஆகா, தாயையும், தம்பியையும் கொன்றவனைப் பழி தீர்க்காமல் விடேன் என்று விஜய்காந்த் சவால் விட்டு விட்டார். ராதா ஜர்னலிஸ்ட் ப்ளஸ் டான்ஸர் போல் இருக்கிறது. இதைப் பற்றி நீங்கள் என்ன எக்ஸ்பர்ட் கமெண்ட்ஸ் கொடுக்கிறீர்கள், மிஸ்டர் சினிமாவாலா?

**சினிமாவாலா: வழக்கமான ஆரம்பம்தான். இப்போது எதுவும் சொல்வதற்கில்லை.**

வில்லனைப் பழிவாங்குவதாகச் சொல்லி விட்டுத் தன் அம்மா கொலையுண்டதில் சம்பந்தப்படாத அவருடைய மகனை விஜய்காந்த் தீர்த்துக் கட்டுவது சரியான அழுகுணி ஆட்டம். அதுவும் போலீஸ் படை சுற்றி நிற்கும் போது, தண்ணீருக்குள் ஒருவரை மூழ்க வைப்பதும், அவர் உடனே பிணமாகி மேலே மிதப்பதும், ஐயோ, ஆட்டம் ஒரு மாதிரி போகிறது....

**சினிமாவாலா: அமெச்சூர்த்தனமான ஆட்டம். ச்சே, ச்சே!**

இரண்டாவது கொலை. செந்திலைத் தண்ணீர் ஊற்றிக் கொடுத்து, மலையிலிருந்து குதிக்கச் சொல்லி, ஹா... ஹா... ஹா... அம்புலிமாமாவில் வந்தால் கூட மூடி வைத்து விடுவார்கள்... இதில் கொஞ்சம் கூட உப்பு மிளகில்லாத போலீஸ் அப்பா — கொலைகாரப் பிள்ளை மோதல்கள்.... போகிற போக்கைப் பார்த்தால்...

**சினிமாவாலா: ஆட்டத்தில் சுவாரஸ்யமே இருக்காது போலிருக்கிறதே!**

ஜர்னலிஸ்ட், டான்ஸர் ராதா, வக்கீல் ராதாவாகவும் ஆஜராவார் போலிருக்கிறதே! விக்கெட் கீப்பர் பௌலராக வருவது போல் இல்லை? போகட்டும், ஏதாவது கச்சிதமான திட்டம் போடுகிறாரா விஜய்காந்த் என்று பார்ப்போம்... அடடா, அதுவும் இல்லை... அவர் போடும் ஒவ்வொரு திட்டமும் புஸ்ஸென்று இருந்தாலும் சினிமாவுக்காக ஜெயிக்கிறது. அதனால் ஸ்டேடியத்தில் எல்லோரும் நிலை கொள்ளாமல் தவிக்கிறார்கள்.

**சினிமாவாலா: ஆ... வ்... ஸாரி, எனக்கே கொட்டாவி வந்துவிட்டது!**

ஆட்டம் முடியப் போகிறது... நல்ல வேளை முடிந்து விட்டது. இதில் திட்டம் போட்டு ஒன்றல்ல, இரண்டல்ல, நான்கு கொலைகள் செய்த விஜய்காந்த் போலீஸால் தண்டிக்கப்பட முடியாமல் போய், அப்புறம் தானே ஸரண்டர் ஆகி, சீக்கிரமே விடுதலையாகி, ராதாவை மணந்து குழந்தை பெற்றுப் பாட்டுப் பாடி... சட்டப் புத்தகங்களை எல்லாம் சினிமா எடுத்தே குழப்பி விடும் எஸ். ஏ. சந்திரசேகரனை மன்னித்தாலும்...

**சினிமாவாலா: அதற்குத் துணை போன கலைஞரை நாம் கேட்பதெல்லாம் இதுதான்: ஐயா, இந்த இரண்டாந்தர மூன்றாந்தரப் படங்களில் எல்லாம் உங்கள் பெயர் எதற்கு?**

வர்ணனையாளர்: **ஜெயமன்மதன்**

**Expert Comments: சினிமாவாலா**

# நரகத்துக்கு

## ஒரு விசிட்

"இதான் சார் நம்ப ஊருக்குப் போற பாதை" என்று தார்ச் சாலையிலிருந்து பிரிந்த ஒரு குறுகலான மண் பாதையைக் காட்டினார் சுலைமான்.

நாங்கள் நின்றிருந்தது, ஊட்டியிலிருந்து மைசூர் செல்லும் ராஜபாட்டையின் முப்பத்திரண்டாவது கிலோ மீட்டரில் இருக்கும் நடுவட்டம் என்ற ஊரின் எல்லையில். அங்கிருந்து தான் சுலைமான் காட்டிய பாதை பிரிந்தது. சுற்றிலும் மலைகள். அந்த மலைகளைப் "பிறந்ததிலிருந்தே காதலிக்கிறாற்போல் தழுவி நிற்கும் மேகங்கள். சூழ்நிலையின் சில்! மலைப்பிரதேசத்தின் இயற்கை அழகு கொட்டிக் கிடக்கும் நந்தவனப் பகுதி. அந்தச் சூழலில் மயங்கி, "சகுந்தலையைத் தேடி, துஷ்யந்தன் காட்டுக்குள்ள நுழைஞ்ச இடம் மாதிரி இருக்கு. போலாம் சார் உங்க ஊருக்கு" என்றோம் வெகு உற்சாகமாக.

ஓர் ஆறு பேர் ஒன்றாகச் சேர்ந்து தார்ச் சாலையில் இருந்து பிரிந்து கீழே இறங்கிப் பாதையில் நடக்கத் தொடங்கினோம். ஒரு நூறு மீட்டர் தூரம் வரை ஆறடி அகலமான பாதை. அதன் பிறகு அது குறுகிக் குறுகி ஒற்றையடிப் பாதையாக

• பாதாள நரகத்தை நோக்கி...





கூரை துறந்த் கொட்டகை. வழியில் இளைப்பாறவாம்!



* மாயாரில் உள்ள தொழிலாளர்கள்... இடது ஓரம் சுலேமான்.

மாறிவிட்டது.

ஒற்றையடிப் பாதையும் சரிவாக இருந்ததால் ஆளை முன்னால் தள்ளியது. கிட்டத்தட்ட குறு ஓட்டமாக அந்தப் பாதையில் இறங்கினோம்.

''எவ்வளவு தூரம் சார் கீழே இறங்கணும்?''

''அஞ்சு இல்லன்னா ஆறு கிலோ மீட்டர் எறங்க வேண்டியிருக்கும்'' என்றார் சுலேமான் படு காஷுவலாக. முன்னால் சளைக்காமல் இறங்கிக் கொண்டேயிருந்தார்.

பாதை இப்போது அங்கங்கே சின்னச் சின்ன ஓடைகளைக் கடந்து இறங்கியது. நிமிர்ந்து பார்த்தோம்., நீல வானில் வெள்ளை மேகக் கூட்டம் ஒன்று கெக்கலி கொட்டியது. தொடுவானும், மலைமுகடும் ஒன்றாகச் சேரும் இடத்தில் நாங்கள் இறங்கிய பாதையின் தொடக்கம் தெரிந்தது.

''அங்கேஏர்ந்தா எறங்கியிருக்கோம்?''

''அட, இப்பத்தானே சார் எறங்க ஆரம்பிச்சிருக்கோம்'' என்றார் சுலேமான். பாதை கொஞ்சம் சமவெளிப் பிரதேசமாய்ச் சென்றது. நாங்கள் நடந்த ஒற்றையடிப் பாதைக்குச் சற்றுத் தள்ளி ஒரு நீரோடை, கலகலவென சிரித்துக் கொண்டே நடந்தது.

''இந்த ஓடைக்கு மானெல்லாம் தண்ணி குடிக்க வரும் சார்'' என்றார் சுலேமான்.

''சுலேமானு, சுலேமான்?''

''அது என்ன மானோ, மான் வரும்! உங்களுக்கு அதிர்ஷ்டம் இல்ல'' என்றார் சுலேமான்.

பாதை இன்னும் சரிந்தது. வெறும் மண் பாதை. மலையினூடே இறங்கியதால் பாதை அப்போதுதான் குளித்து முடித்த மாதிரி ஈர உடலுடன் எப்போதும் இருக்கும் போலும். கொஞ்சம் எச்சரிக்கைக் குறைவாகக் காலை எடுத்து அடுத்த அடி வைத்தபோது 'சர்ரக்' என்று வழுக்கியது. ''பார்த்து சார், பார்த்து'' என்று பதறினார் சுலேமான். ''கொஞ்சம் ஏமாந்திங்க... கீள உருள வேண்டியதுதான். நடுவுல ஏதாவது மரஞ்செடி, கொடி தடுத்தா அங்கங்கே ரத்தக் காயத்தோட தப்பிக்கலாம். இல்லன்னா ஒரேயடியாப் போய்ச் சேர்ந்துடலாம்''

சுதாரித்துக் கொண்டு நின்றோம். பக்கத்தில் இருந்த ஒரு செடியை ஆதாரத்திற்குப் பற்றிக் கொண்டோம். மூச்சிரைத்தோம். முகத்தில் கிலி.

''வாங்க சார் போகலாம்'' என்று மேலும்கீழே அழைத்தார்சுலேமான். தொடர்ந்தோம்.

''மான் வரும்னு சொன்னேன்ல... மான் மட்டுமில்ல சார் — நரி வரும். காட்டுப் பன்னி, காட்டெருமை, சிறுத்தை...''

''சிறுத்தை இருக்கா இங்கே...?''

''இருக்கு சார். எப்ப வரும்? எப்படி வரும்னு சொல்ல முடியாது. திடீர்னு வரும்.'' சுலேமான் முன்னால் இறங்கிக் கொண்டே இருந்தார். சுற்றி வர இருக்கும் எந்தப் புதரைப் பார்த்தாலும் சிறுத்தைக் கண் போல, சிறுத்தை முகம் போல, சிறுத்தை உடல் போல...

''அவ்வப்போதுகுரல்கொடுங்க... எல்லாரும் இருக்காங்களான்னு பார்த்துக்கிட்டு இறங்குங்க.''

பாதை இன்னும் சரிந்து, இன்னும் வளர்ந்து, இன்னும் நெளிந்து......

''இதப் பார்த்தீங்களா... இந்த எடத்தில மேல ஏறி வரவங்களுக்காகத் தகரக் கொட்டா போட்டாங்க. உக்காந்து ரெஸ்ட் எடுத்துக்கிட்டு அப்புறம் போவட்டுங்கற ஐடியால. அந்தக் கொட்டாயோட இரும்புக் கூரையை யாரோ ஓட்ட் அடிச்சிட்டாங்க சார்.''

எலும்புக்கூடாய் ஒரு தகரக் கொட்டகை.

''போட்டோகிராபர் சார், போட்டோ எடுக்கணும்னா இங்கேர்ந்து எடுக்கலாம். அதோ... ஓஓ... கீழ ஒரு காலனி மாதிரி தெரியுது பாருங்க. அதான் நம்ப ஊரு. மாயார். மாயார் ஜி. சி. பி. (அரசு சின்கோனா வளர்ப்புத் துறை) பாத்துக் கொஞ்சம் ஜாக்கிரதையா வாங்க. இந்தப் பாறையிலேர்ந்து விழுந்து ஒருத்தன் செத்திருக்கான்!''

சுலேமானுக்குத் தத்துவம் மிகச் சுலபமாக வருகிறது. பிறப்பையும் இறப்பையும் ஒரே தட்டில் வைத்துப் பார்க்க இயற்கை அவருக்குக் கற்றுக் கொடுத்திருக்கிறது. நமக்கு உடம்பு உதறுகிறது.

பனிமூடியிருந்த பச்சைமலைப் பிரதேசத்தை 'க்ளிக்' செய்துவிட்டு மேலும், மேலும் கீழே...



• இதோ... இது ஆஸ்பத்திரியாமே!

சுலைமான் நமக்கு முன்னால் நண்பருடன் இறங்கி விட்டார். ஆள் தெரியவில்லை. குரல் மட்டும் தெளிவின்றிக் கேட்கிறது. போட்டோ கிராபர் முன்னால் இறங்கி விட்டார். நாங்கள் மட்டும் பின்னால் தனியாய். ஒரு திருப்பத்தில் 'கிர்ரக்' என்று ஓர் உறுமல். சிறுத்தை? சிறுத்தை? நாங்கள் மயக்கம் போடாத குறை. சுற்றிலும் பார்த்தோம். சிறுத்தை இல்லை.

''என்ன நின்னுட்டீங்க?'' என்று போட்டோகிராபர் குரல். கூடவே மறுபடி ஒரு கிர்ரக். ச்சே! பனி, மேகம், மழை ஆகிய இயற்கையின் சீண்டல்களால் அடைபட்டிருந்த மூக்கை ஃபோட்டோகிராபர்தான் அப்படி உறுமும் ஒலியுடன் உறிஞ்சிக் கொண்டிருக்கிறார். எங்களுக்கு மூச்சே அதற்குப் பிறகுதான் சீராக வெளி வந்தது.

அப்புறம் பாதை அங்கங்கே முட்டியைப் பெயர்க்கிற மாதிரி பாறைகளுடன் ஒழுங்கற்ற படிகளாய் இறங்கியது. கிட்டத்தட்ட மகாபலி ராஜா போய்ச் சேர்ந்த இடத்திற்கு வெகு அருகில் போனவுடன், ''வீடுங்க வந்திரிச்சிங்க'' என்றார்.

''அதான் நம்ப ஆஸ்பத்திரி'' என்று ஒரு கட்டடத்தைக் காட்டினார். கட்டடத்தைப் பார்த்தாலே ஆஸ்பத்திரியே நோயுற்று இருப்பது தெரிந்துவிடும். உள்ளே டேபிள் சேர் இருக்கிறதாம். வெளியில் இருந்து 'ஆஸ்பத்திரி'யைப் படம் எடுத்தோம்.

தொழிலாளர்களில் சிலர் இலை பறித்தார்கள்.

''வாங்க நாம தைலம் எடுக்கிற இடத்திற்குப் போவோம்'' என்றார் சுலைமான்.

மாயார்! அரசு, சின்கோனா மரத்தின் இலைகளிலிருந்தும், சிட்டிடோரா மரத்தின் இலைகளிலிருந்தும் தைலம் எடுக்கத் தேர்ந்தெடுத்த இடம். அந்தப் பள்ளத்தாக்கில் அரசு சின்கோனா மரங்களை வளர்க்கிறது. சிட்டிடோரா மரங்களை வளர்க்கிறது. ஏராள மரங்கள். எக்கச்சக்க இலைகள். காற்றிலேயே அதன் வாசனை மிதக்கிறது. சுமார் நூற்றியிருபது பேரை அரசாங்கம் நிரந்தர வேலையில் அமர்த்தியிருக்கிறது. இலைகளைப் பறித்து, இலைகளில் இருந்து



• தைலம் எடுக்கப்படும் காட்சி...

தைலம் எடுக்கும் பணியில் இந்த 120 பேரும் ஈடுபட்டிருக்கிறார்கள். இவர்களுக்கு அரசாங்கம் அந்தப் பள்ளத்தாக்கில் வீடுகள் கட்டிக் கொடுத்திருக்கிறது. பால் கறக்கும் மாடுகள் இரவில் கொட்டிலில் அடைக்கப் படுவது போல், தொழிலாளர்கள் வேலை செய்து முடிந்தவுடன் இந்த வீடுகளில் அடைய வேண்டும். மற்றபடி ஒரு வசதியும் கிடையாது. நாங்கள் அவ்வளவு மூச்சிரைத்து இறங்கிய அந்தப் பள்ளத்தாக்கில், மின்சாரம் கிடையாது. அரிசி, உப்பு, புளி, காய்கறிக் கடை கிடையாது. மருந்து மாத்திரை கடை கிடையாது. எவ்வித நாகரிக முன்னேற்றமும் எட்டிப் பாராத இயற்கைச் சூழலில் இந்தத் தொழிலாளர்களும், அவர்களது குடும்பத்தாரும் வாழ்கிறார்கள். அவர்கள் வீடுகளை அவ்வப்போது காட்டு யானைகள் தாக்குகின்றன. அதனால் அந்த வீடுகளைச் சுற்றி முள்வேலி அமைத்து, சூரியனில் இருந்து மின்சாரத்தை உற்பத்தி செய்து, அந்த மின்சாரத்தை முள்வேலிகளில் பாய்ச்சுகிறார்கள். அப்போதும் அந்தப் புத்திசாலி யானைகள் மரக்கிளைகளால் வேலியை உடைத்துக் கொண்டு உள்ளே நுழைகின்றன.

நாங்கள் அந்த வீடுகளிலிருந்து இன்னும் இருநூறு அடிதூரம் கீழே இறங்கிப் போய்த் தைலம் உற்பத்தியாகும் இடத்தைப் பார்த்தோம். ராக்ஷஸ ட்ரம்களில், சின்கோனா

எல்ஐசி-யின் மகத்தான ஓய்வுக்கால வெகுமதி!



# உங்களது 30 வயது முதல், மாதம் ரூ.50 மட்டுமே செலுத்தி 60 வயது முதல், மாதம் ரூ.920* ஆயுட்கால ஆண்டுத் தொகையாகவும் அத்துடன் உங்கள் குடும்பத்தினருக்கு ரூ. 1,10,098*ம் பெறுவீர்!



# ஜீவன் தாரா

## எல்ஐசி அளிக்கும் புதிய, டெ:பர்ட் ஆன்யுவிடி திட்டம்.

இதோ, ஆயுட்கால பாதுகாப்பிற்கு உறுதி அளிக்கும் ஒரு மகத்தான வருவாய்த் திட்டம். சம்பாதிக்கும் நாட்களிலேயே, ஒரு சிறு தொகையைச் செலுத்துவதன் மூலம் ஓய்வுக் காலம் முழுவதும் கை நிறைந்த பலன்களை அளிக்கும் அரிய திட்டம்—12 மாத காசோலைகள் ஒரே சமயத்தில் கிடைக்கும். தொடர்ந்து உங்கள் குடும்பத்தினருக்கு போனஸுகளுடன் கிராஸ் இன்ஷூரன்ஸ் வேல்யூ எலிமெண்ட் (GIVE) கிடைக்கும்.

ஆண்டுத் தொகை பெறுவதற்கு முன்பாக இறப்பு நேரிடின் உங்கள் ப்ரீமியம் திருப்பியளிக்கப்படும். (3 ஆண்டுகளோ அதற்கு மேலோ ப்ரீமியம் நீங்கள் செலுத்தியிருந்தால் அதற்கான வட்டியுடன்).

20 முதல் 55 வயது வரை எவரும் எல்ஐசி-யின் ஜீவன்தாரா திட்டத்தில் சேரலாம். இந்த கவர்ச்சிகரமான திட்டம் பற்றி மேலும் விவரங்கள் அறிய உங்களது எல்ஐசி பகுதி அலுவலகத்தை அணுகவும்.

*போனஸுடன்

வருடாந்திர ஓய்வுக்கால வருவாய் ரூ. 1,200/-க்கான திட்டம்

| சேரும் வயது (ஆண்டுகள்) | தள்ளி கிடைக்கும் காலம் (ஆண்டுகள்) | வருடாந்திர ப்ரீமியம் (ரூ.) | ஜிஐவிஇ (ரூ.) |
|---|---|---|---|
| 25 | 30 | 65.20 | 11,964 |
| 25 | 35 | 38.90 | 11,958 |
| 30 | 25 | 110.70 | 11,964 |
| 30 | 30 | 65.20 | 11,958 |
| 35 | 20 | 193.80 | 11,964 |
| 35 | 25 | 110.60 | 11,958 |
| 40 | 15 | 355.90 | 11,964 |
| 40 | 20 | 193.70 | 11,958 |
| 45 | 10 | 724.40 | 11,964 |
| 45 | 15 | 355.80 | 11,958 |



## லைப் இன்ஷ்யூரன்ஸ் கார்ப்பொரேஷன் ஆப் இந்தியா

ஆயுள்காப்பு செய்து பாதுகாப்பு பெறுவீர்.

daCunha/LIC/230/87 TAM



* அரசு கட்டிக் கொடுத்திருக்கும் காலனி

இலைகள் போடப்பட்டு வேக வைக்கப்படுகின்றன. இலைகள் வேகும் போது வெளியாகும் ஆவியைத் தண்ணீரால் குளிர்வித்தால் தைலம் கிடைத்து விடுகிறது. நூற்று இருபது கிலோ எடையுள்ள இலையிலிருந்து சுமார் ஒன்றரைக் கிலோ தைலம் கிடைக்கிறது. இந்தத் தைலம் ஒரு கிலோ சுமார் எண்ணூறு ரூபாய் வீதம் அரசாங்கத்தாரால் விற்கப்படுகிறது. வருடம் முழுக்கத் தைலம் எடுக்கிறார்கள். ஒரு தற்காலிகத் தொழிலாளிக்கு நூற்றிருபது கிலோ எடையுள்ள இலை பறிக்கச் சுமார் பன்னிரண்டு ரூபாய் கூலியாகக் கொடுக்கப்படுகிறது. அந்தக் கூலியைத் தொழிலாளி பெற்று, மலையேறி, கடைக்குப் போய் அரிசி, புளி வாங்கி வந்து சமைத்துச் சாப்பிட வேண்டும். கேட்கும் போதே கண்களில் கண்ணீர் வருகிறது.

அந்த 'ஆஸ்பத்திரி'க்கு ஒரு நர்ஸம்மா இருக்கிறார்., மருத்துவ வசதியின்றி அவர்தான் என்ன செய்ய முடியும்? அந்தப் பள்ளத்தாக்கில் ஒரு தபால்காரர் இருக்கிறார்.

தினம் ஒருமுறை மலையேறி, கீழே இறங்கித் தபால்களைப் பட்டுவாடா செய்கிறார். நகரத்திற்கும், பள்ளத்தாக்கு மக்களுக்கும் இடையில் உள்ள ஒரே அரசாங்கத் தொடர்பாளர் இவர்தான்.

எங்களைக் கீழே அழைத்துச் சென்ற சுலைமான் மாயாரைச் சேர்ந்தவர்; தபால் மூலம் வணிகத்துறை படிப்பவர்; வேலையில்லாதவர். அவரது தந்தை நாற்பது வருடங்களாக மாயாரில் தபால்காரர். நாங்கள் கீழே சென்று தைலம் எடுக்கும் இடத்தைப் பார்வையிட்டு வருவதற்குள் வீட்டில் சொல்லி ஓர் அருமையான விருந்துச் சாப்பாட்டைப் பரிமாறினார் சுலைமான்.

''நாங்க ஒன்னுமே கேக்கலை சார். மேல ஏறி இறங்க ஓர் ஒழுங்கான சாலை கூட வேண்டாம்; ஆள் போய் வர்ற மாதிரி ஓர் ஒத்தையடிப் பாதை கேக்கறோம். பாறையை யைச் சிராக்கிப் படியா மாத்திப் புதைச்சாப் போதும்'' என்றார்.

அங்கே பணிபுரியும் காட்டு இலாகா அதிகாரி ஒருவரை அறிமுகப்படுத்தினார். அரசாங்க அதிகாரி. முள் முள்ளாய்த் தாடி. முகத்தில் கவலை, இருந்தும் சிரித்துப் பேசினார்.

அவரிடம் இருந்து விடைபெற்றவுடன் சுலைமான் சொன்னார்: ''கவர்ன்மென்ட் ஆபிஸர்கள்ள யாரையாவது பிடிக்கலைன்னா இங்கே மாத்திடுவாங்க. இவருடைய பதினாறு வயசுப் பையன் காணாமப் போய்ட்டான்னு ஊர்லேர்ந்து இவருக்குத் தகவல் வந்திருக்கு. பத்து நாளா பையன் போன எடம் தெரியல்லே. ஆனா இவரால போய்த் தன்னுடைய ஃபாமிலிக்கு ஆறுதல்கூடச் சொல்ல முடியாத ஒரு நிலைமை.''

கிட்டத்தட்ட அரைநாள் பொழுதிற்குப் பிறகு மலையேறத் தொடங்கினோம். காட்டு அணில் தன்னுடைய விநோதக் குரலில் வழியனுப்பியது. மலையிலிருந்து புரண்டு, சரிந்து வீழ்ந்த அருவிக் குழந்தைகள் சிரித்துச் சிரித்து வழியனுப்பின.

''இந்தத் தண்ணி மொத்தமும் இருபத்து நான்கு மணி நேரமும் — 365 நாளும் வருது. இங்க நதியா ஓடுது. இந்தத் தண்ணியை அணை கட்டி இங்கே மின்சாரம் எடுக்கலாம்'' என்று எங்களுடன் மலையேறத் தொடங்கிய சுலைமான் ஏக்கத்துடன் சொன்னார்.

ஏற ஏற மூச்சிரைத்தது. சற்றுமுன் பெய்த மழையில் பாதை சறுக்கியது. நாக்கு வறண்டது. நுரையீரல்கள் மூச்சு மூச்சு என்று ஏங்க, இதயம் கத்தியலால் ஓங்கி அடிக்கிறாற்போல் லப், டப், லப் டப் என்று அடித்துக் கொண்டது. நடந்த ஒற்றையடிப் பாதையில் சாண் நீளத்திற்கு ஒரு கருந்தேள் கொடுக்கைத் தூக்கி நின்று 'வா' 'வா' என்றது. வழியோடு போன 'அட்டை' ஒன்று எங்களில் ஒருவரின் ரத்தத்தைச் சத்தமின்றி உறிஞ்சத் தொடங்கியது.

''இந்த இடத்திலதான்...'' என்று கால்வழி ஏறுமுன் சுலைமான் நின்று சொன்னார்: ''விஷம் ஏறின ஒரு பையனை மேல தூக்கிட்டுப் போன போது செத்துப் போனான்! ஆஸ்பத்திரி போற வரைக்கும் காத்திட்டிருக்க உசிரு பிரியப்படலே.''

இன்னும் கொஞ்சம் மேலேறினோம். எங்களுக்கு ஒரே ஆறுதல் அங்கங்கே பாதை மறித்த மலைநீர். அதைக் குடித்துக் குடித்து ஆசுவாசமடைந்தோம்.

''இந்த எடத்தில ஒரு அபார்ஷன் ஆன பொம்பளையைத் தூக்கிட்டு வரயில...''

''நிறுத்துங்க சுலைமான்'' என்று தாங்க முடியாமல் இரைந்தோம். பேசப் பேச துக்கம். மாயார் பள்ளத்தாக்கு மக்களின் அவலம்.

அரசாங்கம் என்ன செய்யலாம்?

அந்தப் பாதையில் 'வின்ச்' சிஸ்டம் ஒன்றைக் கொண்டு வரலாம். தொழிலாளர்களுக்கு நகரத்தின் நடுவில் காலனி அமைத்துக் கொடுக்கலாம். இலைபறித்துப் போட வின்ச் மூலம் தொழிலாளிகளை ஏற்றிச் சென்று அங்கங்கே இறக்கி விடலாம். இதெல்லாம் முடியவில்லையா — குறைந்தபட்சம்...

அவர்கள் இறங்கி ஏற ஒரு படிக்கட்டுப் பாதை.

அத்தியாவசியமான பொருள்களைக் கொண்ட ஒரு நியாய விலைக்கடை.

அவசர மருத்துவ சிகிச்சைக்கு ஓர் ஒழுங்கான ஏற்பாடு.

இதையாவது செய்யுங்கய்யா. புண்ணியமாய்ப் போகும்.



தமிழ் நாடு எக்ஸ்பிரஸ் விபத்து-சதி வேலை தான் காரணம்!
இல்லை.. பாலம் உடைந்தது தான் காரணம்!
மந்திரி மாதவராவ் சிந்தியா
ரயில்வே போலீஸ் அதிகாரி
சிங்கள பயங்கர வாதம்
காலிலே காயம் ஆறிண்டு வந்துன்னு நெனைச்சேன்!.. கஷ்டகாலம்... தலையிலே கட்டி!...
இந்திய அமைதிப் படை
தமிழர் பயங்கர வாதம்
ராஜீவ் செய்வது சரி! விடுதலைப் புலிகள் ஒழிக!
இந்திய அரசு
தமிழினக் கொல்லாதே! போர் நிறுத்தத்துக்கு உத்தரவிடுக!
குழந்தை வேஷம்



# கல்கி

1987 நவம்பர் 22
மலர் 46 இதழ் 17
பிரபவ கார்த்திகை 6



## சூப்பர் நீதிபதி பொன்னையன்!

‘மண் மனப்பான்மை’ என்ற தடபுடலான ஒரு புதிய சொற்றொடரைப் பிரயோகித்து ஒரு குறுகிய நோக்கினை நியாயப்படுத்தப் பார்க்கிறார் பொன்னையன். இந்த மண் மனப்பான்மை என்பது ஜாதி வேற்றுமையை மேன்மேலும் வளர்த்து, அதனை உயர் நீதி மன்றத்தில் நீதிபதிகளின் ஆசனங்களைக் கூட ஆக்கிரமிக்கச் செய்வதுதான் என்பதைப் பார்க்கும்போது திடுக்கிடுகிறோம்.

தக்க சமயத்தில் மக்கள் உரிமைக் கழகத் தலைவர் பாலை சண்முகம், பொன்னையனின் தவறான போக்கினைச் சுட்டிக்காட்டி, மக்களை எச்சரித்திருக்கிறார். ‘ஜாதி அடிப்படையில் உயர்நீதிமன்ற அல்லது உச்சநீதிமன்ற நீதிபதிகளை நியமிப்பது பேராபத்தானது; அது நீதிபதிகளின் சுதந்திரத்தையும் நடுநிலையையும் பாதித்து ஜாதி உணர்வோடு நீதிபதிகள் வழக்குகளில் தீர்ப்புக் கூற வழிவகுக்கும்’ என்று மக்கள் உரிமைக் கழகத்தின் ஒரு தீர்மானம் கூறுகிறது. இதே தீர்மானம், ‘பொன்னையனின் போக்கு அரசியல் சாசனத்தின் இரு ஷரத்துக்களுக்கு விரோதமானது’ என்பதையும் எடுத்துக் காட்டுகிறது. உயர்நீதி மன்றத்தில் நீதிபதியாக, ஒரு ஜாதியைச் சேர்ந்தவர் என்பதற்காக நியமனம் செய்யப்படவும் கூடாது; ஒரு ஜாதியைச் சேர்ந்தவர் என்பதற்காக நியமனம் மறுக்கப்படவும் கூடாது.

உயர்நீதிமன்ற நீதிபதிகளின் நியமனத்தில் உயர்நீதிமன்றத் தலைமை நீதிபதியுடன் மோதியும் அவர் மீது பகிரங்கமாகக் குற்றம் சாட்டியும் பொன்னையன் தம்மைத் தாமே இழிவுபடுத்திக் கொண்டிருக்கிறார்.

அரசியல் சாசனப்படி உயர் நீதி மன்ற நீதிபதிகள் ஜனாதிபதியால் நியமிக்கப்படுகிறார்கள். அப்படி நியமனம் செய்யு முன்னர் ஜனாதிபதி, மூவரைக் கலந்தாலோசிக்கிறார். அவர்கள், நாட்டின் உச்சநீதிமன்றத்தின் பிரதம நீதிபதி, மாநில ஆளுனர், மாநிலத்தின் உயர்நீதிமன்றத் தலைமை நீதிபதி ஆகியோர் ஆவர். உயர்நீதிமன்ற நீதிபதி நியமனத்தில் சரியானபடி எடைபோட்டுத் தக்கவரைத் தேர்ந்தெடுக்க உயர்நீதிமன்றத் தலைமை நீதிபதியை விடத் தகுதியான ஒருவர் இருக்க முடியாது. ஆயினும் மூவரில் யாரேனும் ஒருவர் தப்பித் தவறித் தகாத ஒருவரைச் சிபாரிசு செய்தாலும் மற்றொருவர் அதனைத் திருத்த வாய்ப்புண்டு. நிலைமை இவ்வாறிருக்க, இப்போது பொன்னையன் தமிழக உயர்நீதிமன்றத்தின் தலைமை நீதிபதியைப் புறக்கணித்துவிட்டு, நியமனத்துக்கான பெயர்களை நேரடியாகத் தமிழக அரசு, மத்திய அரசுக்கே சிபாரிசு செய்யும் என்று கூறியிருக்கிறார். மாநில அரசுக்குச் சிபாரிசு செய்யும் அதிகாரம் மட்டுமே உண்டு. நியமன அதிகாரம் கிடையாது. நியமனத்தை நிராகரிக்கும் அதிகாரமும் இல்லை. ஆனபோதிலும் கூட, ‘உயர்நீதிமன்றத் தலைமை நீதிபதி சிபாரிசு செய்துள்ள பெயர்களைத் தமிழக அரசு நிராகரிக்கிறது’ என்று பொன்னையன் கூறுவது விசித்திரமாக மட்டுமின்றி வேதனை அளிப்பதாகவும் உள்ளது.

முன்பு ‘மண்ணின் மைந்தர்கள்’ என்று கூறிக் கொண்டு, சில அரசியல்வாதிகள் குறுகிய பிரதேசப் பித்தை வளர்த்தார்கள். இப்போது ‘மண் மனப்பான்மை’ என்று கூறிக் கொண்டு பொன்னையன் ஜாதி வேற்றுமையை நீதித் துறையின் அரியாசனத்திலேயே அமர்த்தப் பார்க்கிறார்.

உயர்நீதிமன்றத்தின் தலைமை நீதிபதி மீதே குற்றம் சாட்டித் தீர்ப்பும் வழங்கும் சூப்பர் நீதிபதியாகத் தம்மைத் தாமே பொன்னையன் கருதிக் கொண்டு செயலாற்றுவது சிறுபிள்ளைத்தனம்.

தமிழ்த்திரு நாடுதன்னைப் பெற்ற
தாயென்று கும்பிடடி பாப்பா. — பாரதியார்.



# கலைஞரின் ராஜதந்திரம் தோற்றுப் போனதா?



• தட்டியில் புகுந்தால்...

• ...கோலத்தில் பாய்கிறார்!

## அ. தி. மு. க. — புதிய திருப்பம்

**ம**ற்ற கட்சிகளில் இல்லாத புதுமை அ. தி. மு. க. வில் உண்டு, இது எல்லாருக்குமே தெரிந்த ரகசியம்தான். மற்ற கட்சிகளில் கோஷ்டி என்றால் தலைமைக்கு எதிராக இருக்கும். அ. தி. மு. க. வில் அத்தனை கோஷ்டிகளுக்கும் தலைவர் எம். ஜி. ஆர்.! தம் தொண்டர்களைப் பல்வேறு கோஷ்டிகளாகப் பிரித்து வைத்திருப்பவர் அவரே. ஆர். எம். வீ. கோஷ்டிக்கும் அவரே தலைவர். செல்வி கோஷ்டிக்கும் அவரே தலைவர். சமயம்வரும்போது ஒன்றைத்தூக்கி, மற்றதை அமுக்குவார்.

இப்போது கட்சியிலும் ஆட்சியிலும் கோஷ்டிகளைப் புறக்கணித்துவிட்டு, 'ஆர். எம். வீ.'க்குச் சில புதிய பலங்களை உருவாக்கிக் கொடுத்திருக்கிறார், எம். ஜி. ஆர். முன்பு எம். ஜி. ஆர். மன்றத் தலைவர் முசிறிப்புத்தனை ஆர். எம். வீ. கோஷ்டிக்கு ஆதரவு கொடுக்கக் கூடாது என்று கட்டுப்படுத்தியிருந்தார். ஆனால், அதற்கு மாறாக இப்போது முசிறியாரிடம் 'நீயும் வீரப்பாவும் சேர்ந்து பணியாற்ற வேண்டும்' என்று கூறியிருக்கிறார். ஆர். எம். வீ.க்குத் தோதாகச் சில மந்திரிசபை மாறுதல்களையும் தற்போதைய சட்டசபைக் கூட்டத் தொடர் முடிந்ததும் செய்யவிருக்கிறார்.

இப்படி கோஷ்டி அரசியலிலேயே ஒரு புதிய திருப்பத்தை ஏற்படுத்துவானேன்? இமர் என்று ஆர். எம். வீ. யைப் பலப்படுத்துவானேன்? கட்சியையும் தொண்டர்களையும் தேர்தலுக்குத் தயார்படுத்துவதற்குத்தான்! கூட்டம் சேர்க்க 'ஜெ' பயன்படுவார் என்றால், ஓர் இரும்புக் கரத்துடன் தொண்டர்களைக் கட்டுப்படுத்தித் தேர்தலை நடத்துபவர் ஆர். எம். வீ. தான். அதற்கான ஆயத்தமே இது! அ. தி. மு. க. ஒருவேளை தனியாகப் போட்டியிட நேரலாம் என்பதாலும் இந்த முன்னெச்சரிக்கை.

## மூலவரின் பராமுகம்

**த**மிழக சட்டசபைத் தொடர் முடிந்ததும் நிகழவிருக்கும் மந்திரிசபை மாற்றம் பற்றிச் சில சூசகமான சமிக்ஞைகள் தென்படுகின்றன. பல்கலைக்கழகமான ஒரு பெரிய மந்திரியிடம் மூலவர் வெளிப்படையாகவே ஒரு பராமுகத்தைக் காட்டி வருகிறார். விமான நிலைய வரவேற்பில் அவரிடம் பேசவே இல்லை! மந்திரிசபைக் கூட்டத்திலும் அவரைப் பொருட்படுத்தவில்லை. அவர் கட்சிப் பணி பெயரால் இன்னொரு ராகவானந்தம் ஆக்கப்படலாம்!

திருவண்ணாமலை மண்வாசனைக்காரர் நிச்சயமான 'டிராப் அவுட்' என்கிறார்கள். சர்வ கட்சித் தலைவரும் ஆடுகிறார்! திரைப் படங்களுக்குப் பண லேவாதேவி செய்த ஓர் அமைச்சரை, முதல்வர் திட்டிய திட்டில் அவருக்குக் கடுமையான ஜுரமே வந்து விட்டதாம்!

## கலைஞரின் ராஜதந்திரம்

**அ**. தி. மு. க. — இ. காங். உறவில் சமீப காலத்தில் ஏற்பட்டு வந்த மனத்தாங்கலை விரிவாக்கி, சுத்தமான 'பிளவு' ஆக்கி விட முயன்றார் கலைஞர். அவர்களைப் பிரித்து விட்டு இ. காங்கிரஸுடன் சேருவது என்பது அவருக்கு இப்போது முக்கியமல்ல. இ. காங்கிரஸைப் பிரித்துத் தனிமைப்படுத்தி விட்டால் —

'ஒண்டிக்கு ஒண்டி'யாக அ. தி. மு. க. வையும், இ. காங்கிரஸையும் தனித்தனியாகச் சரித்து விடலாமே! அதற்குக் கலைஞர் பயன்படுத்திய ஆயுதம், 'ஈழப் போராளிகள்!'

'ஈழப் போராளிகளுக்குத் தாம் மட்டுமே அடைக்கல நாயகன்' என்ற ஓர் அபிப்பிராயத்தை உருவாக்கினார். இப்படிச் செய்தால் — எம். ஜி. ஆர். போட்டி போட்டுக் கொண்டு தமது இமேஜைக் காத்துக் கொள்ளும் நோக்கில் ஈழப் போராளிகளுக்குத் தாமும் ஆதரவு தெரிவிக்க, ராஜீவுக்குக் கோபம் வர, இ. காங்கிரஸ் — அ. தி. மு. க. உறவு பிளவுபடும் என்று எதிர்பார்த்தார், கலைஞர்.

ஆனால் அவர் தட்டியிலே புகுந்தால் கோலத்தில் பாய்கிறார் எம். ஜி. ஆர்! 'போரை நிறுத்துங்கள்' என்று கோரிக்கை விடுவது போல் அவர் அறிக்கை விட, சிக்னல் கிடைத்து விட்டதாக எண்ணி ரத்தத்தின் ரத்தங்கள் கொதித்து எழ எம். ஜி. ஆர். சாவகாசமாக, 'அதெல்லாம் அவரவர் தனிப்பட்ட அபிப்பிராயங்கள்; கட்சியின் கருத்துக்கள் அல்ல' என்று கூறுவதுடன் தமக்கும் பிரதமருக்கும் இடையில் வேற்றுமையில்லை என்று பிரதமரைக் கொண்டே அறிவிக்கச் செய்கிறார்! ஆகமொத்தம், கலைஞரின் ராஜதந்திரம் தோற்றுவிட்டது போலத்தான் தோன்றுகிறது!

— ஒட்டக்கூத்தன் ஜி

* ''அடிபட்ட புலிகள் ஜாக்கிரதை' என்ற தலையங்கம் உண்மை நிலையை நன்கு சித்திரிக்கிறது. பலவிதமான கருத்துக்கள் நாட்டில் நிலவும் இத்தருணத்தில் பாராட்ட வேண்டியதைப் பாராட்டி, கண்டிக்க வேண்டியதைப் பாரபட்சமின்றிக் கண்டித்து, இலங்கை நிலவரத்தைத் துல்லியமாகக் கூறுவதில் கல்கி தனியிடம் பெறுகிறது. எனது வாழ்த்துக்கள்!

தஞ்சை — ஆர். ஆராவமுதன்

* கல்கி இதழ் வந்ததும் முதலில் படிக்க ஆவலைத் தூண்டுவது தலையங்கம்தான். அதிலும் குறிப்பாகச் சிலவாரங்களாக (அமைதிப்படை — விடுதலைப் புலிகள்) நடுநிலையில் நின்று, பேலன்ஸ் தவறாமல், தலையில் குட்ட வேண்டிய இடத்தில் குட்டியும், பாராட்ட வேண்டிய இடத்தில் பாராட்டியும் வருகிறீர்கள். கங்கிராட்ஸ்!

தர்மபுரி—2. — வித்யா.



# ஒளியேற்ற உதவினீர்கள்!

* தமிழீழம் மற்றும் கலைஞரைத் தொடர்புபடுத்திக் கேட்டிருந்த கேள்விக்கு அளித்திருந்த பதிலானது பிரதமர் மற்றும் நம் அரசியல் கட்சித் தலைவர்களின் பால் தராசார் கொண்டிருக்கும் பரந்த மனப்பான்மையைத்தான் பளிச்சிட்டுக் காட்டியது: பாராட்டுக்கள்!

கிருஷ்ணகிரி — ஆர். மாதவராமன்.

* சூறாவடியைவிட அதிகமாக நடந்து கொள்ளுகிற கட்சிகள் தி.மு.க., அ.தி.மு.க.தான் என இருந்தேன். போஸ்டர் போடுவதில் இ.காங்கிரஸ் அந்தக் கட்சிகளையும் விஞ்சிப் போய் விட்டது!

வாணியம்பாடி — எம். இராதா கிருஷ்ணன்.

* அதிமுக எழுத்தாளராக இருந்தாலும் 'சண்டைக் கோழிகள்' மூலம் அசத்திவிட்டார் பாரதி!

கோவை — ஆர். ஆறுமுகம்.

* உமா கல்யாணியின் 'முலாம் பூசிய பார்வைகள்' சிறுகதை என் மனத்தைத் தொட்டது.

சேலம்—1. — சி. சரவணன்.

* தன்னம்பிக்கை, விடாமுயற்சி, உழைப்பு இவற்றிற்கெல்லாம் இனி உதாரணம் காட்ட வேண்டுமானால் ஜல்பருல்லாவைத் தைரியமாகக் காட்டலாம்.

தர்மபுரி. — மு. மதிவாணன்.

* டாகுமெண்டரி படத்துறையில் இறங்கி இருக்கும் ராதாநாராயணனின் பேட்டி மிகச் சிறப்பாக இருந்தது. டி.வி.யில் கடனே என்று காட்டாமல், ஆங்கிலத்தில் 'சர்வைவல்' போன்ற விலங்குகள், பறவைகள் பற்றிய படங்களைக் காட்ட நேரம் ஒதுக்குவது போல ஒதுக்க வேண்டும். அப்போதுதான் டாகுமெண்டரிப் படங்களின் மேல் மக்களுக்கு ஆர்வம் ஏற்படும்.

சென்னை. 17. — எஸ்.வி. ராஜசேகர்.

* 'கொஞ்சம் சோப்பப்படுங்கள்' ப்ளீஸ்! விஞ்ஞானத் தொகுப்பால் ஹீலியத்தைப் பற்றி அதிக அளவில் தெரிந்து கொள்ள முடிந்தது: உண்மை!

மேல்பட்டி. — எல். மாறன்.

* வ.உ.சி. மாவட்டக் கலெக்டரிடம் தாங்கள் எடுத்துச் சொன்னதால் இப்போது ஷேக் சாகுல் அமீதுக்குக் காது கேட்கும் கருவி கிடைத்து விட்டது: அதன் மூலம் காதும் சரியாகக் கேட்கிறது. ஏழை இளைஞனின் வாழ்வில் ஒளி ஏற்ற உதவி செய்த தங்களுக்கு ஷேக் சாகுல் அமீது சார்பாகவும் எனது சார்பாகவும் மனமார்ந்த நன்றி.

ஆத்தூர். — செ. செளந்திர பாண்டியன்.

* கடந்த 25.10.87 கல்கி இதழில் கழுகு மலையிலுள்ள வெட்டுவான் கோயிலைச் சமணர் கோயில் என்று குறிப்பிட்டுள்ளீர்கள். உண்மையில் அது சிவன் கோயிலே: அதிலுள்ள உருவங்களும் சைவ, வைணவத் திருவுருவங்களே!

பொள்ளாச்சி. — தி. இராசமாணிக்கம்.

* கடந்த 1.11.87 கல்கி இதழில், ''சொன்னதைச் செய்தீர்களா?'' என்ற தங்களின் கேள்விகளுக்குத் தூத்துக்குடி நகர மன்றத் தலைவர் கூறியுள்ள பதில்கள் உண்மைக்குப் புறம்பானவை. உண்மை நிலை இதோ:

பாதாளச் சாக்கடைத் திட்டத்தின் இரண்டாவது கட்ட வேலைகள், தேர்தலுக்கு முன்பு நடந்தவை. மூன்றாவது கட்ட வேலைகள் ஆரம்பிக்கப்படவே இல்லை. மேல்நிலை நீர்த் தொட்டிகள் கட்டப்பட்டுள்ள இடங்களை அவர் சொல்வாரா? அவர் தமக்காக ஒரு ஜீப் வேண்டும் என்றுதான் நகராட்சி கமிஷனரைப் பரிந்துரை செய்து அரசுக்கு எழுதச் சொன்னாரே தவிர, குப்பை வண்டிகள் வாங்க அல்ல! ஒவ்வொரு வார்டிலும் ஒவ்வொரு திருமண மண்டபம் என்று சொல்லியுள்ளார். தூத்துக்குடியிலுள்ள 36 வார்டுகளில் எந்த வார்டில் கட்டி வருகிறார்? சொல்ல முடியுமா? ஸ்டேடியம் இன்றும், பன்றிகளின் கூடாரமாகத்தான் இருந்து வருகிறது. மேலும், தூத்துக்குடி இரண்டாம் கேட் மேம்பாலம் அமைக்க, எங்கள் பாராளுமன்ற உறுப்பினர் கடம்பூர் ஜனார்த்தனம், பாராளுமன்றத்தில் பேசிக் கட்டுவதற்கு முடிவும் எடுக்கப்பட்டது. மேம்பாலம் அமைக்கவோ, சுரங்கப்பாலம் அமைக்கவோ ஒரு லட்சம் பாயிண்டுகள் தேவை. ஆனால், தூத்துக்குடியில் கிடைக்கும் இடமோ, 47 ஆயிரம் பாயிண்டுகள்தான். எனவே, இங்கு மேம்பாலம் அமைக்க இயலாது என மத்திய அரசு திட்டத்தையே கைவிட்டுவிட்டது. ஆதாரம் என்னிடம் உள்ளது!

தூத்துக்குடி—1. — கா. சதா.

• திம்பட்டி கிராமம்.



• அதைவா... சினிமாவுக்குப் போகக் கூடாது...

# பெண்கள் சினிமாவுக்குப் போகத் தடை!

ட்ராலியில் காமிரா காத்திருக்கிறது. எதிரே நாயகனும், நாயகியும் ஒருவரை ஒருவர் வளைத்துப் பிடித்துக் கொண்டு, டான்ஸ் மாஸ்டர் சொல்லிக் கொடுத்த விலுக் விலுக் மூவ்மெண்ட்களைச் செய்ய, காமிரா அவர்களிலிருந்து விலகி, பின்னணியில் ஓங்கியிருக்கும் நீலமலைகளையும், பச்சை போர்த்திய பள்ளத்தாக்குகளையும் மேய்ந்து திரும்புகிறது.

சினிமாக்காரர்களின் சொர்க்கம் நீலகிரி. காமிரா மேன்களின் வரப் பிரசாதம் நீலகிரி! தமிழ் சினிமா, இந்தி சினிமா, தெலுங்கு சினிமா என்று அத்தனை பேருக்கும் இயற்கை செட் போட்டு வைத்த இடம் நீலகிரி.

இந்த நீலகிரியில்தான் ஓர் ஊரில் சினிமா பார்க்கத் தடை. அதுவும் பெண்களுக்கு மட்டும்! ஆச்சரியமாயில்லை?

கோத்தகிரி மலைகள் தாலாட்டும் அந்த ஊரின் பெயர் திம்பட்டி. சுமார் நூற்றியறு

பது குடும்பங்கள். மேலும், ஊழுமாகப் பரவிக் கிடக்கும் வீடுகள். பெரும்பான்மையான வர்கள் படுகர் இனத்தைச் சேர்ந்தவர்கள்.

ஊர்க் கட்டுப்பாட்டைப் பற்றி ஆண்கள் சிலர் சொன்னது:

"இதோ நிக்கறாங்களே, இவங்களும் இன்னொரு பொம்பளேயும் நாலஞ்சு வருஷத்துக்கு முன்னுல சினிமாவுக்குப் போன போது, பிரச்னே ஆரம்பமாச்சு. இந்த இரண்டு பேரும் தியேட்டர்ல, தவறு நடந்துக்கிட்டாங்கன்னு குற்றச்சாட்டு. ஊர்ப் பெண்கள் சினிமாவுக்குப் போகக் கூடாதுன்னு உடனே பஞ்சாயத்திலே தடை போட்டுட்டாங்க. ஆம்பிளேங்க ஊருக்குள்ளே குடிக்கலாம்; கலாட்டா பண்ணலாம்; சினிமா



* சிவசுப்பிரமணியன்: பெண்கள் மட்டும் சினிமாவுக்குப் போகக் கூடாதுங்கிறது என்ன நியாயம்?

வுக்குப் போகலாம்... ஆனு அப்பாவிப் பெண்களுக்கு வேறே எந்தப் பொழுது போக்கும் கிடையாது. அவங்களே சினிமாவுக்குப் போகக் கூடாதுன்னு சொல்றது என்ன நியாயம்?"

"அப்ப உங்க ஊர்ப்பெண்கள் சினிமாவே போறதில்லேயா?"

"தடைச் சட்டத்தில ஒரு சின்ன பாயிண்ட். பக்கத்திலே இருக்கிற கோத்தகிரி தியேட்டர்லே படம் பார்த்தாத்தான் பெண்களுக்கு அபராதம் நூற்றியொரு ரூபாய். ஆனுல் அவங்க பஸ்லேறி ஊட்டியிலே போய்ப் பார்க்க எந்தத் தடையும் இல்லே! ஏழைத் தொழிலாளிங்களுக்கு வெளியூர் போய்ப் படம் பார்க்க ஏதுங்க வசதி? ஆசையை அடக்க முடியாம சினிமாப் பார்க்கப் போன குடும்பங்களே இப்ப பஞ்சாயத்து ஒதுக்கி வச்சிட்டது. ஊர் உற்சவத்தில் கலந்துக்கக் கூடாதுன்னு சொல்லிட்டது. ஆனுல் இந்த வருஷம் உற்சவத்துக்குப் பணம் தேவைங்கறதுக்காக எங்களேயும் சேர்த்துக்கிட்டாங்க...

"அப்போதும் சாமி ஊர்வலம் வரும் போது, சாமி எங்க வீடுகளுக்கு முன்னுலே வர, நாங்க கோத்தகிரி போலீஸ் ஸ்டேஷனில் புகார் செஞ்சு, போலீஸைக் கொண்டு வர வேண்டியதாச்சு...!"

இப்படி ஒதுக்கப்பட்ட குடும்பங்கள் கிட்டத்தட்ட எழுபது. பெண்கள் வெட்கம் விலகாமல், 'சினிமாவுக்குப் போகக் கூடாதுன்னு எப்படிங்க?'' என்றார்கள். சுந்தரி, சுசீலா, விமலா, சீதா, நிர்மலா, சாவித்திரி, ருக்மணி, மணிமேகலே (அட்டையில் உள்ளவர்கள்) — எல்லோரும் பஞ்சாயத்துத் தடையை மீறிச் சினிமாவுக்குப் போனவர்



° சுந்தரி: முதன் முதலாகத் தடையை மீறிச் சினிமாவுக்குச் சென்றவர்.

கள். அபராதம் கட்டினுல் ஒரு சினிமாப் பார்க்கச் செலவு, டிக்கெட் + 101 ரூபாய்!

"அப்புறம் நாங்க ஊர்ப் பஞ்சாயத்து முடிவை எதிர்த்து வழக்குப் போட்டோம்..."

"கோர்ட்லயா?"

"இல்லீங்க. எங்க அமைப்பு எப்ப

டின்னு, ஊர்ப் பஞ்சாயத்துக்கு அடுத்தபடி எட்டு ஊர்ப் பஞ்சாயத்து. அதுக்கு மேலே பதினைஞ்சு ஊர்ப் பஞ்சாயத்து. அதுக்கும் மேலே பத்தொன்பது ஊர்ப் பஞ்சாயத்து. அதுக்கும் மேலே 'நாக்குப் பட்டா'ன்னு நீலகிரியிலுள்ள அத்தனை படுகர் இனத்தாருக்கும் தலைமையான பஞ்சாயத்தும் இருக்கு. நாங்க இப்போ எட்டு ஊர்ப் பஞ்சாயத்தில எங்க பிரச்னையைச் சொன்னோம். எங்களுக்குச் சாதகமான தீர்ப்புக் கெடைச்சதும், பஞ்சாயத்து ஆளுங்க பதினைஞ்சு ஊர்ப் பஞ்சாயத்துக்கு அப்பீலுக்குப் போயிருக்காங்க—சினிமாப்பார்க்கக் கூடாதுன்னு உத்தரவு போடச் சொல்லி..."

இந்தத் தடைச்சட்டம் போடுவதில் மும்முரமாயிருந்த பஞ்சாயத்துப் பெரியவர் நஞ்சாகவுடரை அவர் வீட்டிலேயே சந்தித்தோம். சுருக்கங்கள் விழுந்த முகத்தை நிமிர்த்திப் பார்த்தார்.

"பெண்கள் சினிமாவுக்குப் போகக் கூடாதுன்னு உத்தரவு போட்டதுக்கு என்னங்க உண்மையான காரணம்?"

"சில காரணங்களே உங்ககிட்டே சொல்ல முடியாது. எங்களுக்குப் பிடிக்கலே. ஊருக்குன்னு சில கட்டுமானங்கள் இருக்கு. முன்னால மார்னிங் ஷோ, மாட்னி ஷோ போகலாம்னு சலுகை இருந்தது. ஆனால் பெண்களைப் பத்தி நாங்க கவலைப்பட்டோம். எங்க கம்யூனிட்டி டிரெஸ் போட்டிருந்தப்போ, பெண்களுக்கு மரியாதை இருந்தது. அப்புறம் தமிழ் கல்சர் பாதிச்சு, சேலை கட்ட ஆரம்பிச்சாங்க. காலம் மாறிட்டு வருது..."

"மாறி வர்ற காலத்திலே ஆண்கள் சினிமாவுக்குப் போகலாம்... பெண்கள் போகக் கூடாதா?"

"போகிற இடத்திலே ஏதாவது தகராறு வந்தால், ஆண்களுக்கு எந்த அவமானமும் இல்லே. ஆனால், ஒரு பொண்ணு அவமானப் பட்டுட்டா, அப்புறம் அவளை யாரு கட்டுவாங்க?"

"பக்கத்திலே இருக்கிற கோத்தகிரியிலேதான் சினிமா பார்க்கத் தடை, வெளியூர்ல பார்க்கலாம்னு உத்தரவு இருக்காமே? உள்ளூரை விட வெளியூர்லே பெண்களுக்குப் பாதுகாப்புக் குறைச்சலாச்சே?"

"வெளியூர் போனா வீட்டிலேர்ந்து ஆண் துணை போகுமே?"

"அப்ப, ஆண் துணையோட கோத்தகிரி தியேட்டருக்கும் போக அனுமதி கொடுக்கலாமே?"

"கொடுத்த சலுகையைத் தவறுப் பயன்படுத்திக்கிட்டாங்க. அதனால கொஞ்ச நாளைக்குச் சினிமாவுக்குப் போகாமத்தான் இருக்கட்டுமேன்னுதான் தடையுத்தரவு



* நஞ்சா கவுடர்: ஊர்த் தலைவர்.

போட்டோம்..."

"உங்கள் குடும்பத்தைச் சேர்ந்த பெண்கள்லாம் சினிமாவுக்குப் போறதில்லேயா?"

"இல்லே... நாலஞ்சு வருஷமா எங்களைச் சேர்ந்த நூற்றி ஆறு குடும்பங்கள் லோக்கல் சினிமாவுக்குப் போகலே. போகணும்னா வெளியூர் போய்த்தான் பார்த்திருக்காங்க. பேசாம ஊர்லேயே ஒரு வி.சி.ஆர்., டீ.வி. வாங்கிப்போட்டுடலாம்னு ஐடியா பண்ணிக்கிட்டிருக்கோம்..."

"அப்ப இந்தத் தடை உத்தரவை விலக்கிக்கற எண்ணமே இல்லையா?"

"ஊரைப் பிளவு பண்ணுவதற்குன்னு சில சக்திங்க இருக்கு. ஊர்க் கட்டுமானம் உடைஞ்சாச் சமுதாயம் கெட்டுப் போகும். இப்ப போலீஸை உள்ளே கொண்டாந்துட்டாங்க. இன்னும் என்னென்ன நடக்குமோ? நாங்களும் அந்தத் தடை உத்தரவை எடுத்துடறது பத்தி யோசிச்சுக்கிட்டிருக்கோம்..." நஞ்சாகவுடரின் குரல் தளர்ந்திருந்தது. ஊர்ப் பிரச்னைக்கு வக்காலத்து வாங்கிக் கொண்டு வெளியூர்க்காரர்கள் வருகிறார்களே என்ற கவலையாயிருக்கலாம்.

அதற்கு அவசியம் இல்லாமல் பிரச்னை அவர்களுக்குள்ளேயே சுமுகமாக முடிந்து விட்டால் எல்லோருக்கும் சந்தோஷம் தான்.

நீலகிரி மாவட்டத்தைச் சுற்றி வந்து மக்களைச் சந்தித்துப் பேசி, கட்டுரைகளைத் தொகுத்து வழங்கியுள்ளவர்கள்:

சுரேஷ் — பாலா

புகைப்படங்கள்; மேலட்டை வண்ணப் படம்:

கே. வி. ஆனந்த்

"மாதவன்..."

"......"

"மாது..."

இந்த முறை சற்று அழுத்தம் திருத்தமாக வசந்தா அழைத்ததும், மாதவன் திரும்பினான்.

"ம்?"

"நான் பாட்டுக்குப் பேசிட்டே இருக்கேன், உங்க கவனமெல்லாம் எங்கே இருக்கு?"

மாதவன் புன்னகை செய்தான்.

"எங்கேயுமில்லே... அந்தக் கொழந்தைங்க விளையாட்டைத்தான் பார்த்துக்கிட்டு இருந்தேன்..."

அவன் பார்வைவிழுந்தஇடத்தைவசந்தா எறிட்டாள்.

## 6



# வேரில்லாத மரங்கள்

## சிவசங்கரி

சறுக்கு மரத்தில் இரண்டு குழந்தைகள் சறுக்க முற்பட, எதிர்ப்பக்கமாய் இன்னொன்று ஏறி, அவர்களைச் சறுக்க விடாமல் முன்னால் நின்று முரண்டியதில் சின்னதாய் வாக்குவாதம் எழுந்திருப்பது, சிவுசிவுத்துப் போன முகங்களில் வெளிப்படையாய்த் தெரிந்தது.

வசந்தா அலுப்புடன் 'ப்ச்' என்றாள்.

''முக்கியமான விஷயத்தைப் பேச றப்போ பராக்குப் பார்க்கற, கற்பனைல மூழ்கிடற பழக்கத்தை எப்பத்தான் விடப் போறீங்களோ!''

அவள் எரிச்சலைச் சமாளிக்கும் நோக்கத்தோடு மாதவன் அவசரமாய் முன்னால் சாய்ந்து அவள் கையைப் பற்றினான். கண்களைச் சிமிட்டிச் சிரித்து, ''நீ இப்படிச் சொல்றதைக் கேட்கறப்போ, ஒரு ஜோக் நினைவுக்கு வருது... சொல்றேன், கேக்கறியா?'' என்றவன் அவள் பதிலுக்குக் காத்திராமல் தொடர்ந்தான்.

''ஒரு கணவன்கிட்டே ஒரு மனைவி பேசிக்கிட்டு இருந்தாங்களாம். கணவன் கையில பேப்பரை வெச்சுக்கிட்டு மனைவி சொல்றதுக்கெல்லாம் 'ம்,' 'ம்'னு 'ம்' கொட்டிக்கிட்டே இருக்க, மனைவி எரிச்சலோட சொன்னாங்களாம், 'நான் பேசி முடிச்சு முழுசா ரெண்டு நிமிஷம் ஆயிடுச்சு, நீங்க 'ம்' கொட்டறதை நிறுத்தறீங்களா?'ன்னு... எப்படி? அந்த அளவுக்குக் கவனத்தோட... ஓ...ஹ்...

தான் கூறிய ஜோக்கை மாதவன் அனுபவித்துச் சிரிக்க, வசந்தா மீண்டும் 'ப்ச்' என்று சூள் கொட்டி முகத்தைத் திருப்பிக் கொண்டாள்.

மாதவன் பிடித்திருந்த பிடியை லேசாக இறுக்கினான்.

''என்ன வசந்தா, சிரிப்பு வரலியா?''

''சிரிக்க நல்ல நேரம் பார்த்தீங்க மாது...''

''சிரிக்கத் தனியா நேரம் ஒதுக்கணுமா என்ன? எப்ப வர்றதோ அப்ப சிரிச்சிட வேண்டியதுதானே? சிரிக்கச் சிரிக்கத்தான் ஆயுசு கூடும்னு எங்க ஆயா சொல்வாங்க வசந்தா... அப்புறம்...''

வசந்தாவின் முகத்தில் சிடுசிடுப்பு அதிகமாவதை உணர முடிய, மாதவன் ''ஓகே... ஓகே... ஸீரியஸாப் பேசலாம்.... என்ன வேணும் சொல்லு...'' என்றான்.

''வேற என்ன? நம்ம பிரச்சினையைப் பத்தித் தான்...''

''அதான் பத்து நாளா வேணுங்கற அளவுக்குப் பேசி, ஒரு முடிவுக்கு வந்தாச்சே!''

வசந்தா கண்களை இடுக்கிக் கொண்டு எதிரில் இருந்தவனை ஏறிட்டாள்.

''நீங்க உறுதியாத்தான் இருக்கீங்களா மாதவன்?''

''என்னைப் பார்த்தா அப்படித் தெரியலையா?''

''தெரியுதுதான்... ஆனாலும் அப்பப்ப விளையாட்டா என்னென்னவெல்லாமோ குறுக்கே பேசிடறதுல, சந்தேகமாயும் இருக்கு...''

மாதவன் சிகரெட் பெட்டியைப் பையிலிருந்து எடுத்து ஒன்றைப் பற்ற வைத்துக் கொண்டான்.

''இத்தனை பேசியும் சந்தேகப்பட்டால் எப்படி வசந்தா? உன் வார்த்தைகளை நான் அப்படியே ஏத்துக்கலியா?''

''நான் துவக்கத்துலேர்ந்தே என் முடிவுல உறுதியா நிக்கறேன் மாது. ஆனால், நீங்க அப்படித் தீர்மானமா இருக்கறதாப் படலியே...?''

''நிக்காதயேன் — கால் வலிக்கப் போகுது...'' என்று மீண்டும் ஜோக் அடிக்க எண்ணியவன், அவள் முகத்தைப் பார்த்து விட்டுப் புகையை இழுத்து, நெஞ்சுள் நிரப்பிக் கொண்டான்; தணிந்த குரலில் பேசினான்.

''தீவிரமா இல்லாட்டி இப்படி உன்னோட உட்கார்ந்து பேசிக்கிட்டிருப்பேனா வசந்தா?''

''ஐயாம் ஸாரி... உங்களைப் புண்படுத்தணும்னு நான் அப்படிப் பேசலே... சந்தேகத்தைப் பேசித் தீர்த்துடறது நல்லதுன்னு நீங்க தானே சொல்வீங்க, அதான் கேட்டேன்... ஓ. கே.... உங்க முடிவிலே நீங்க உறுதியா இருக்கீங்க, அப்படித்தானே?''

''ம்.''

''ரெண்டு பேரும் தீர்மானிச்சுட்டப்புறம் மேலே ஆக வேண்டியதை என்னன்னு யோசிக்கிறதுதானே புத்திசாலித்தனம்?''

மாதவன் சிகரெட்டை அணைத்துத் தூர எறிந்து, ''என்ன அவசரம் வசந்தா?'' என்று மெள்ளக் கேட்க,

அடங்கியிருந்த எரிச்சல் வசந்தாவிடம் மீண்டும் தலை தூக்கியது.

''ஆரம்பிச்சிட்டீங்களா? நாலு வார்த்தைக்கொருதரம் இந்தக் கேள்வியைக் கேட்காட்டி உங்களுக்கு மேலே பேச வராதா?''

''அதுக்கில்லே வசந்தா, வந்து...''

''வந்துமில்லே... போயுமில்லே... என் நிலைமை புரிஞ்சா, 'என்ன அவசரம்'னு [illegible]



அமைச்சர்: மன்னா! நமது ஆட்சியின் அவலங்களை மக்களுக்கு விளக்க, எதிர்கட்சி நாளை 'பந்த்' நடத்தப் போகிறது!

மன்னர்: அப்படியா.... அதற்கு ஆதரவு தெரிவித்து நாமும் 'பந்த்' அறிவித்து விடுவோம்!

— கடுவை கோபால்சாமி.

இருந்தாப் பட்டுன்னு சொல்லிடறது தேவலை மாது... இந்த மாதிரி தயங்கித் தயங்கிப் பேசினா, என்னால புரிஞ்சிக்க முடியல... இஷ்டம் இல்லியா? சரி... 'ஸாரி வசந்தா என்னால முடியாது'ன்னு தெளிவா, வார்த்தைல சொல்லிடுங்க... ப்ளீஸ் டோண்ட் கீப் மி கெஸ்ஸிங்.''

கோபத்தைத் தாண்டிக் கொண்டு, ஏமாற்றத்தில் அவள் கண்கள் கலங்க முற்பட, 'அடடா...' என்றபடி மாதவன் பரிதவித்தான்.

''இப்ப நான் என்ன சொல்லிட்டேன்னு நீ பெரிய பெரிய வார்த்தையெல்லாம் பேசறே? அவசரப்படாம, நிதானமாச் செய்ய வேண்டியதை யோசிக்கலாம்ன்றதுல, என்ன தப்பு?''

''எங்க வீட்டுல அவசரப்படறதால, நானும் அவசரப்படறேன், ரெண்டு நாளைக்கொருதரம் அந்த ஆல்பர்ட் எங்க வீட்டுக்கு வர்றதும், அசடு வழியச் சிரிக்கறதும் என்னால தாங்க முடியலே... வீட்டுல எல்லாரும் இலைமறைவு, காய் மறைவா எங்களைச் சம்பந்தப்படுத்திப் பேச ஆரம்பிச்சிட்டாங்க... ஆல்பர்ட் அம்மாளுக்கு ஹிஸ்ட்ரெக்டமி ஆபரேஷன் ஆகியிருக்கு. அவங்க வீட்டுக்கு நல்லபடியா வந்து, கொஞ்சம் உடம்பு தேறினப்புறம் கல்யாணப் பேச்சை எடுக்கலாம்னு காத்துக்கிட்டிருக்காங்க... மிஞ்சிப் போனா இன்னும் ஒரு மாசம்... அதுக்குள்ள என் வழியை நான் பார்த்துக்கிட்டாத்தான் உண்டு... உங்களுக்கு எங்கண்ணனைத் தெரியாது. சரியான மொரட்டு ஆசாமி... பிடிச்ச முயலுக்கு மூணு கால்னு நிரூபிக்க, நாலாவது காலை வெட்டக் கூடத் தயங்க மாட்டாரு... இத்தனை சொன்னப்புறமும் என் நிலைமை, அவசரம் உங்களுக்குப் புரியலைன்னா, மேற்கொண்டு நான் பேசறதுலே அர்த்தமே இல்லீங்க...''

உணர்ச்சிவசப்பட்டுப் பேசுபவளின் முகமும், பாவனையும் ஒருவித பரிதாபத்தை உண்டாக்க, மாதவன் நாற்காலியைக் கிட்டத்தில் இழுத்துப் போட்டுக் கொண்டான். யார் பார்த்தாலும் அக்கறை இல்லை என்கிற எண்ணத்துடன் அவள் கையைப் பிடித்துக் கொண்டான்.

''உன் நிலைமை நல்லாவே எனக்குப் புரியுது வசந்தா... நாளைக்குச் சின்னதா ஒரு குற்ற உணர்ச்சியோ, ஏமாற்றமோ வராம இருக்க வேண்டித்தான் நிதானமா யோசிக்கலாமேன்னு சொன்னேன்...''

''என்னைப் பொறுத்தவரை நீங்க சொல்ற எந்தக் குற்ற உணர்வும் வராது மாது...''

''நிச்சயமா?''

''சத்தியமா!''

கண்களை மலர்த்தி, மனப்பூர்வமாக அவள் பேச, மாதவன் நெகிழ்ந்தான்.

''உன்னைக் கட்டிக்க நான் கொடுத்து வச்சிருக்கணும் வசந்தா...''

''உண்மையாத்தான் சொல்றீங்களா?''

''சத்தியமா!''

''இப்ப, மேலே ஆக வேண்டியதைப் பற்றி யோசிக்கலாமா?''

''செஞ்சிட்டாப் போவுது... ம்ம்...? முதல்லே இரண்டு பக்கத்துப் பெரியவங்ககிட்டேயும் பேசணும்... அதுதான் முதல் காரியம்... பக்குவமாப் பேசி, சம்மதம் வாங்கற வழியைப் பார்க்கணும்...''

வசந்தா புருவம் நெரிய யோசித்தாள்.

''இது நடக்கிற காரியமாத் தோணுதா, மாது?''

''ஏன் நடக்காம?''

''சம்மதம் தருவாங்கன்னு, மெய்யாலுந்தான் நம்பறீங்களா?''

''......''

வசந்தா கையை அவன் பிடியிலிருந்து உருவிக் கொண்டு, தண்ணீர் டம்ளரை எடுத்து, ஒரு வாய் குடித்தாள்.

''உங்க வீட்டைப் பத்தி எனக்குத் தெரியாது. ஆனால், கண்டிப்பாக எங்க அண்ணன் நம்ப கல்யாணத்துக்கு ஒத்துக்க மாட்டாரு...''

''அப்ப? அவரண்ட விஷயத்தைச் சொல்லிச் சம்மதம் வாங்க நீ முயற்சி செய்யறதா இல்லியா?''

''கிடைக்காதுன்றப்போ ஏன் முயற்சி செய்யணும் மாது?''

''அது தப்பில்லியா, வசந்தா?''

''என்ன தப்பு? என் மனசுக்குப் பிடிக்காதவரை மணக்கச்சொல்லி அவங்க நிர்ப்பந்தப் படுத்தறது மட்டும் தப்பில்லியா?''

''......''

வசந்தா குனிந்து நகங்களை ஆராய்ந்தாள். கீழே கிடந்த குச்சி ஒன்றை எடுத்து நக இடுக்கில் இருந்த அழுக்கை வெளியேற்றினாள்.

''ஆனால், எங்க அத்தம்மாகிட்டே சொல்லாம எந்தக் காரியத்தையும் இதுநாள் வரை நான் செஞ்சதில்லை... அதனால அவங்ககிட்டே மட்டும் சொல்லலாம்னு இருக்கேன்...''

"அதோ போறாரே அவர் ஒரு "உதாரண புருஷர்...!"

"பார்த்தால் தெரியலையே...?"

"பார்த்தால் தெரியாது. பேசிப் பாருங்க... எதைச் சொன்னாலும், அதுக்கு ஓர் உதாரணம் சொல்வார்...!"

— கரடிகுளம் ஜெயாபாரதிப்பிரியா.



மாதவன் ஆர்வத்தோடு வினவினான்.

"அவங்க நம்ம கல்யாணத்துக்குச் சம்மதிப்பாங்கன்னு நினைக்கறியா? அவங்க மூலமா உங்கண்ணனைச் சரிப்படுத்த முடியுமா?"

வசந்தா உதட்டைப் பிதுக்கி, தோளைக் குலுக்கினாள்.

"தெரியல... அத்தம்மா என்னிக்குமே என் மனசு புரிஞ்சு நடந்துப்பாங்கதான்... அவங்க கிட்டே முதல்லே சொல்றேன்... அப்புறமா பார்த்துக்கலாம்..."

"ஒருவேளை உங்க அத்தை இந்தக் கல்யாணத்துக்குச் சம்மதிக்கலைன்னா?"

வசந்தா நிமிர்ந்து அவன் கண்களை நேராகப் பார்த்தாள்.

"கிடைக்குதோ, கிடைக்கலையோ — யாருக்காகவும் என் முடிவை மாத்திக்க நான் ரெடியா இல்லே மாது..."

அவளுடைய உறுதியான பதில் அலாதி நிறைவைத் தர மாதவன் மறுபடியும் நெகிழ்ந்து போனான்.

"சொந்தக்காரங்க் எல்லாரையும் பகைச்சுக்கிட்டாவது என்னோட வாழ வர்ற அளவுக்கு நான் அத்தனை உசந்தவன்னு நீ நினைக்கறியா?"

வசந்தா மயக்கத்தோடு புன்னகை புரிந்தாள்.

"என் சாய்ஸ்ல எனக்கு நம்பிக்கை இருக்கு மாது... அதை விடுங்க... எனக்காக உங்க உறவு மனுஷங்களை விட்டு வர நீங்க தயாரா இருக்கீங்களா?"

"கண்டிப்பா... ஆனா, அது அவசியமா, இல்லையான்னு தெரியத்தான், பெத்தவங்க கிட்டே மனசு திறந்து பேசிடணும்னு இருக்கேன்..."

"ஒத்துப்பாங்களா?"

"தெரியாது... அம்மாவைச் சுலபமா என் பக்கம் சாய்ச்சிடலாம். அப்பாவைக் கொண்டு வர்றது கஷ்டம்... இருந்தாலும் முயற்சி பண்ணத்தான் போறேன்..."

"பெஸ்ட் ஆஃப் லக்... ஆனால், செய்யறதை உடனே செஞ்சிட்டீங்கன்னா தேவலை..."

"நீ இவ்வளவு உறுதியாப் பேசினப்புறமும் காலங்கடத்தறதுல அர்த்தம் இல்லேதான். வர்ற சனி, ஞாயிறுல காஞ்சிபுரத்துக்குப் போய்ப் பேசிட்டு வந்திடறேன்... ஓ.கே.?"

"நானும் ஞாயித்துக்கிழமை சர்ச்சுக்குப் போறப்போ அத்தம்மா கிட்ட சொல்லிடறேன்..."

"ஆல் தி பெஸ்ட்..."

"தாங்க் யூ..."

ஒரு நிமிஷ மௌனத்துக்குப் பின் மாதவன் தயக்கத்தோடு கேட்டான்:

"ஒருவேளை எங்க வீட்டுல உன்னை ஏத்துக்கச் சம்மதிச்சாங்கன்னா, நீ மதம் மாறத் தயாரா வசந்தா?"

வசந்தா உடனே பதில் கூறாமல் மேஜை மேல் சிந்தியிருந்த சொட்டு நீரை விரலால் இழுத்துக் கோலம் போட்டாள். பின், சின்னக் குரலில் பதில் கேள்வி கேட்டாள்:

"இதையே, நான் திருப்பி உங்ககிட்டே கேட்டால்?"

இதை எதிர்பார்க்காத தினுசில் மாதவன் திடுக்கிட்டது அப்பட்டமாகத் தெரிந்தது.

"நான்...? கிறிஸ்டியனா... வந்து... நோ... நோ..."

மேற்கொண்டு அவனைப் பேச விடாமல் வசந்தா கையைக் குறுக்கே நீட்டித் தடுத்தாள்.

"ப்ளீஸ் வேணாம்... தேவையில்லாத தர்க்கமே வேணாம். நீங்க நீங்களா இருங்க. நான் நானா இருக்கேன். அன்பு இருக்கறப்போ மதம் மாற வேண்டிய அவசியம் இருக்கறதா நான் நினைக்கலே... ஒருத்தர் மதம், பழக்க வழக்கத்தை மற்றவர் மதிக்கக் கத்துக்கிட்டாப் போதும். ஏற்று வாழணும்கறது கட்டாயம் இல்லே. நாம ஒருத்தரை ஒருத்தர் நேசிக்கறோம். இதுதான் முக்கியம். இல்லையா மாது?"

தெளிவோடு அவள் பேசுவதாகத் தோன்ற, மேலே எதுவும் விவாதிக்க மனமில்லாமல் குனிந்து, "ஐ லவ் யூ" என்று மாதவன் கூற, வசந்தாவும் மெதுவாய்ப் பதிலுக்குத் தன் உள்ளத்துக் காதலையெல்லாம் கண்களில் தேக்கி "ஐ லவ் யூ டூ" என்று முனகினாள்.

(தொடரும்)

# போட்டிக் கதை — 13

தலைவர் பேசத் தொடங்கியதும் கூட்டத்தினர் அமைதியோடு கவனித்தனர். "வசந்தத்தின் சுகந்தத்தை அனுபவித்துச் சுகவாழ்வு வாழும் வசதிகளைத் துறந்து, நாட்டின் தன்மானத்தைக் காக்கும் வேள்வியில், தங்களையே காவு கொடுக்கத் திரண்டு வந்துள்ள இளைஞர் கூட்டமே! உங்கள் தியாக உணர்வுக்கு முன்னால் நான் தலை வணங்குகிறேன். இந்தப் போராட்ட வண்டியை ஓட்டிச் செல்லும் பொறுப்பை ஏற்றுள்ள நெல்லை சோமயாஜுலு, நமக்கும் நல்லவர்களுக்கும் புதியவரல்ல. அறிமுகம் தேவையில்லா அருஞ்செயல் வீரர் அவர். நாட்டுப் பற்றும் நற்சிந்தனையும் இவரது உடம்பில் ஊறிப்போனவை. எதிர்கால இளைஞர் கூட்டத்திற்கு எடுத்துக்காட்டாக விளங்கப் போகிறார் இந்த வித்தக மனிதர். போராட்ட வண்டிக்கு இவர் பூட்டத் தேர்ந்தெடுத்துள்ள முதல் காளைகள் சுப்பராயலு நாயுடுவும், முகமது சாலியா ராவுத்தரும். இருவருமே மதுரைமாநகர் தந்த மாணிக்கங்கள் என்பதை அறியும் போது நமக்கு மதுரை வாசிகளின் மேல் சற்றுப் பொறாமையாகக் கூட இருக்கிறது. வெள்ளையர் ஆட்சியை இல்லாமல் ஒழிக்க வீறு கொண்டு எழுந்துள்ள நெல்லைச் சிங்கம் சோமயாஜுலு இப்பொழுது பேசுவார்"

கூட்டத்தினரில் பெரும்பாலோர் அப்பொழுதுதான் மீசை முளைக்கத் தொடங்கியிருந்த வாலிபப் பருவத்தினர். தலைவர் பேசி முடித்ததும் எல்லோரும் மகிழ்ச்சி ஆரவாரம் செய்தனர்.

இரண்டாவது வரிசையில் சற்று நெருக்கியடித்துக் கொண்டு இளந்தாடியோடு அமர்ந்திருந்த ஒரு முஸ்லீம் வாலிபன், சற்று பரபரப்போடு காணப்பட்டான். தலைவர் பேசி முடித்ததும் அவன், 'அருகிலிருந்த ஒருவரை "இப்போ பேசி முடித்தது யாருங்க?" என்று மெதுவாகக் கேட்டான்.

"இவர்தான் டாக்டர்.பி.வரதராஜுலு நாயுடு. பெரிய தொழிலாளர் தலைவர். இவர் பங்கு கொள்ளாத நாட்டுப் பணிகளே தமிழ் நாட்டில் கிடையாது" என்று பதிலளித்தான் பக்கத்து இளைஞன்.

நிமிர்ந்த உடலும் யாருக்கும் அஞ்சாத பார்வையும் கொண்ட சோமயாஜுலு பேசத் தொடங்கினார்.

"நாம் அனைவரும் காந்திய வாதிகள் என்பதையும், இந்தப் போராட்டம் காந்தியத்திற்கு ஓர் அணிகலனாக விளங்க வேண்டுமே தவிர, அதற்கு ஓர் அழுக்குக் கறையாக அமைந்து விடக்கூடாது என்பதையும் கதர் அன்பர்கள் அனைவரும் கவனமாக நினைவில் வைத்துக் கொள்ள வேண்டும். நாளைய போராட்டத்தில் பங்கு கொள்ளும் வாய்ப்பு இருவருக்கு மட்டுமே கிடைத்துள்ளது என்றாலும் அவர்களை உற்சாகமூட்டி அவர்களுக்கு மனச் சோர்வோ களங்கமோ ஏற்படாதவாறு கவனித்துக் கொள்ள வேண்டிய பொறுப்பு உங்களுடையதுதான் என்பதை நீங்கள் சற்றும் மறக்கக் கூடாது.

"போராட்டத்தில் பங்கு கொள்ளும் இருவரும் மற்ற தொண்டர்களோடு நாளை காலை சிலை இருக்குமிடத்திற்கு ஊர்வலமாக வருவார்கள். சிலைக்கு அருகே வந்ததும் அவர்களோடு யாரும் செல்லக் கூடாது. போலீசார் தடியடி நடத்தினாலோ, அல்லது போராட்டத் தொண்டர்கள் இருவரையும் கைது செய்தாலோ, யாரும் அதற்கு எதிர்ப்புத் தெரிவிக்கக் கூடாது. எந்தக் காரணத்தைக் கொண்டும் தொண்டர்கள் யாரும் வன்முறையில் ஈடுபடக் கூடாது. போலீசாரைத் திருப்பித் தாக்கக் கூடாது. காந்தியடிகளுக்கோ அல்லது அவருடைய அறப்போர் முறைக்கோ இழுக்கு எதுவுமே ஏற்படாத வண்ணம் முழக்கங்கள் எழுப்ப வேண்டும். நாம் நடத்தப் போவது வன்முறைப் போராட்டமல்ல. சாத்வீக அறப்போராட்டம் என்பதை நன்றாக நினைவில் வைத்து நடந்து கொள்ள வேண்டும் என்று உங்கள் அனைவரையும் பணிவோடு கேட்டுக் கொள்கிறேன்."

சோமயாஜுலு கைகூப்பி அமர்ந்ததும், கூட்டத் தலைவர்களைப் பற்றி அருகே இருந்தவரிடம் சந்தேகம் கேட்ட முஸ்லிம் வாலிபன் முகத்தில் ஆத்திரம் பொங்க எழுந்தான்.

"உங்களுக்கெல்லாம் இப்படி ஒரு பொம்பளைத் தனமான போராட்டத்தை நடத்துவது வெட்கமாகத் தோன்றவில்லை? புடவையைக் கட்டிக் கொண்டு கைநிறைய வளையலைப் போட்டுக் கொண்டு அப்புறமாக இந்தப் போராட்டத்தை நடத்துங்கள்" என்று கொதித்து எழுந்த அந்த முஸ்லீம் வாலிபன் யாரும் தடுக்குமுன்பாகப் பாய்ந்து முன்னேறித் தலைவருக்கு அருகே சென்று நின்று கொண்டான்.

உணர்ச்சிப் பிழம்பாகக் கொதித்துக் கொண்டிருந்த அந்த இளைஞனைக் கவலையோடு நோக்கினார் தலைவர்.

"நம்மால் புரிந்து கொள்ள இயலாத மற்றவர்கள் செயல் எல்லாமே நமக்குக் கையாலாகாத் தனமாகத்தான் தோன்றும். புரிந்து கொண்டு விட்டால் அதன் விளைவும் அதனால் அடையும் ஆனந்தமும் வேறுதான். அதைப் புரிந்து கொள்வதற்கும் பக்குவம் வேண்டும்" என்று புன் சிரிப்போடு கூறிய தலைவர், "தம்பி, நெய்ல் சிலையைத் தகர்க்க வேண்டும் என்று இவ்வளவு துடியாக இருக்கிறாமே..... இதற்கு என்ன காரணம் என்பதை நான் அறிந்து கொள்ளலாமா?" என்று பணிவாகக் கேட்டார்.

தலைவர் அந்தக் கேள்வியைக் கேட்டதுதான் தாமதம். சையது என்ற பெயர் கொண்ட அந்த வாலிபனின் முகத்தில் எழுந்த ஆத்திரக் கனலைக் கண்டு தொண்டர்கள் அனைவரும் பதறிப் போனார்கள். அவனுடைய உடல் நரம்புகளெல்லாம் முறுக்கேறிப் புடைத்துக் கொண்டு அவன் உணர்ச்சிப் பிழம்பானான்.

"தம்பி சையது" என்று அவனுக்கருகே வந்து அன்போடு முதுகில் தட்டிக் கொடுத்த சோமயாஜுலு "உன்னைப்போல் மகத்தான செயல்களைச் செய்யப் புறப்பட்டவர்கள், இப்படி எளிதில் உணர்ச்சி வசப்பட்டு விடுவது காரியத்தைக் குலைத்து விடும். உன்னை நீயே இழந்து விடாமல் சற்று அமை

திப் படுத்திக் கொண்டு, பிறகு தலைவர் கேட்டதற்குப் பதில் சொன்னுல் போதும்'' என்ருர்.

சோமயாஜுலு பேச்சால் தன்னிலைக்கு வந்து விட்ட சையது பனிக்கும் கண்களால் எல்லோரையும் நோக்கினுன்.

எல்லோரும் திகைப்போடு சையதுவை நோக்கினர்.

''எமனுக்கு ஏஜெண்டாக விளங்கிய நெய்லின் படுபாதகச் செயல்களுக்கு இரையான எவ்வளவோ குடும்பங்களுள் எங்களுடைய குடும்பமும் ஒன்று. நெய்லின் கொடுமைகளைப் பற்றி நீங்கள் கேள்விப்பட்டிருப்பீர்கள் அல்லது படித்திருப்பீர்கள். ஆனுல், அந்தப் படுபாவி எங்கள் குடும்பத்தை எப்படித் துடிதுடிக்க வைத்து வேரறுத்தான் என்பதையெல்லாம் நான் எங்கள் பாட்டி தாத்தா வாய் மூலமாகவே கேட்டறிந்து கொதித்துப் பொங்கி வளர்ந்தவன். அதனுல் என்னுடைய எரிமலை உணர்வு வேறு; உங்களுடைய தேச பக்தி உணர்வு வேறு.''

எல்லோரும் சையது மேற் கொண்டு பேசப் போவதைக் கேட்க ஆவலாகக் காத்திருந்தனர்.

எழுபது ஆண்டுகளுக்கு முன்பு; அதாவது 1857 ஆம் ஆண்டு இந்தியாவின் வடபகுதிகளில் விடுதலை வேட்கை கொழுந்து விட்டு எரிந்தது. தம்மையே அர்ப்பணித்துக் கொண்டு, மங்கள பாண்டே மூட்டிய இந்த விடுதலைத் தீயைக் கொழுந்து விட்டெரிய வைக்க ஜான்சி ராணி இலட்சுமிபாய், நானு சாகிப், பகதூர்ஷா, ஹசரத் பேகம், தாந்தியா தோப்பே போன்ற எண்ணற்ற தியாகச் சுடர்கள் தங்கள் பங்கைச் செய்து விட்டு அழியாப் புகழ் பெற்றனர். அவர்களது தியாகமும் வீரமரணமும் உறங்கிக் கிடந்த சாதாரணக் கோழைகளைக் கூடக் கிளர்ந்தெழ வைத்தன. விடுதலைப் புயலின் வேகத்தைக் கண்டு, வெள்ளையர் ஆட்சி கதிகலங்கிப் போனது.

''வட இந்தியப் பகுதிகள் விடுதலை வீரர்கள் பிடியில் வந்து ஆங்கில ஆதிக்கத்திற்கு சாவு மணி அடிக்கும் நல்ல நேரத்தில், ஆங்கிலப் படையினருக்கு உதவி செய்ய, இங்கே சென்னை மாநகரத்திலிருந்து கேப்டன் நெய்ல் அனுப்பப்பட்டான். நெய்ல் கொடுமை புரிவதிலும் மக்களைச் சித்திரவதை செய்வதிலும் தனித் திறமை படைத்திருந்தான். அவனைப் படைக்கும் போது ஆண்டவன் இதயம் என்ற ஒன்றை வைக்கவே மறந்து விட்டானே என்றுதான் எல்லோரும் ஐயப்படும்படி அவன் சித்ரவதைக் கலையில் தன்னிகரில்லாதவனுக இருந்தான். கண்ணில் பட்ட மக்களையெல்லாம் கொன்று குவித்தான். அப்படியும்கூட அவனுடைய ஆத்திரம் அடங்கவில்லை. ஆங்கில ஆதிக்கத்திற்கு எதிர்ப்புத் தெரிவிக்கும் ஒரு பூண்டுகூட உயிரோடு இருக்கக் கூடாது என்று அவன் முடிவு கட்டியதால், கிராமம் கிராமமாகச் சென்று தன் படைகளோடு அவற்றைச் சூழ்ந்து கொள்வான். வீடுகளுக்குத் தீ வைத்து மக்களை வெளியே ஓடிவரும்படி செய்து, தப்பியோடவிடாமல் பீரங்கிகளால் அவர்களைக் கொன்று தள்ளினுன்.

''மனித மிருகமான நெய்லின் கொடுமைக்குப் பலியானவர்களுள் என்னுடைய கொள்ளுத் தாத்தா சாபர் அலியும் ஒருவர். அவர் கான்பூரில் ஆங்கிலப் படையில் பணியாற்றி வந்தார். புரட்சி தொடங்கியவுடன் ஆங்கில கர்ப்பிணிப் பெண்கள் பலரை அவர் தம்முடைய உயிரைப் பணயம் வைத்துத் தப்பிச் செல்ல உதவினுர்.





டிராஃபிக் கான்ஸ்டபிள்: ஏன்யா இது 'ஒன் — வே'ன்னு தெரியுமில்ல?

ஸ்கூட்டர் ஓட்டி: தெரியும் சார். ஆனா நீங்க இங்கே நிப்பீங்கன்னு தெரியாது, சார்!

— குடியாத்தம் மு. மோகன்.

ஆனாலும், நெய்ல் அவரை விடவில்லை. தொழுகையின் போது, நிராயுதபாணியாக அவர் இருந்தபோது அந்தக் கொடுங்கோலன் அவரைக் கைது செய்தான். செய்யாத ஒரு குற்றத்திற்காக அவருக்குக் கசையடி தண்டனை கொடுத்தான். கசையடியின் கொடுமை தாங்காது என் கொள்ளுத் தாத்தாவின் உடலில் இருந்து இரத்தம் பீறிட்டுத் தரையை நனைத்தது. அந்த நிலையில் கூட அவன் அதோடு நிறுத்திக் கொள்ளவில்லை. கீழே சிந்திய இரத்தத்தைத் தன்னுடைய நாவினாலேயே நக்கிச் சுத்தம் செய்யும்படி என்னுடைய தாத்தா கட்டாயப்படுத்தப்பட்டார், துப்பாக்கி முனையில். அதற்குப் பிறகும்கூட அந்த மனித மிருகம் என் தாத்தாவை விடவில்லை. தூக்கு மரத்தில் அவரைத் தொங்க வைத்து அவர் துடித்துத் துடித்துச் சாவதைக் கண்டு மனமகிழ்ந்தான். உயிர் போகும் நிலையில் என்னுடைய தாத்தா சாபர் அலி, 'இந்தப் பாவி நெய்லை என் மகன் பெரியவனானதும் பழிக்குப் பழிவாங்க வேண்டும்' என்று இறைவனைக்கூவி வேண்டிக் கொண்டார். ஆனால், என் கொள்ளுத் தாத்தாவின் இறுதி விருப்பத்தை நிறைவேற்றி வைக்கும் பேறு என்னுடைய தாத்தாவுக்குக் கிடைக்கவில்லை. அந்தப் பாவியால் பாதிக்கப்பட்ட எவ்வளவோ ஆயிரக்கணக்கானவர்களில் யாரோ ஓர் இனம் தெரியாத பாக்கியவானுக்கே அந்தப் பொன்னான வாய்ப்புக் கிடைத்தது. ஆனாலும், என்னுடைய தாத்தா விடவில்லை. நெய்லின் மகன் எங்கே இருக்கிறான் என்று கேட்டறிந்து அவனைக் கொன்று, தாமும் தூக்கில் மாண்டு போனார். அதற்குப் பிறகும் ஆங்கில ஆட்சி எங்களை விடவில்லை. எங்கள் குடும்பத்தை வேரோடு அழித்துவிட வலைபோட்டுத் தேடியது. உயிருக்குப் பயந்து, நாங்கள் வடபாரதத்திலிருந்து தமிழ்நாட்டின் ஆற்காட்டுக்கு வந்து விட்டோம்.''

தங்களையே மறந்து கேட்டுக் கொண்டிருந்த அனைவரும் அவன் மேற்கொண்டு கூறப்போவதைக் கேட்க ஆவலாக இருந்தனர்.

''போன வாரம்தான் நண்பன் ஒருவனுடைய திருமணத்திற்காக நான் சென்னை வந்தேன். இங்கே வந்த பிறகுதான் மனித வேட்டையாடின அந்தக் கெடுங்கோலனுக்கு மவுண்ட் ரோடில் இப்படி ஓர் அழகான சிலை செய்து வைத்திருப்பது எனக்குத் தெரிய வந்தது. உயிர் காக்கும் தெய்வங்களுக்குச் சிலை இருக்கலாம். ஆனால், உயிர்க் கொல்லிகளுக்குச் சிலை இருப்பதை அனுமதிக்கலாமா? நம்முடைய பாட்டன் பூட்டன்களையெல்லாம் ஈசல்களைப் போல் கொன்று குவித்து வேட்டையாடிய அந்த மனித அரக்கனுக்கு இப்படி ஒரு சிலை நம்முடைய நாட்டில் அமைக்க அனுமதித்திருப்பது எவ்வளவு பெரிய அவமானம்? அந்தக் கொடுங்கோலனின் சிலையை அகற்ற இங்கே ஒரு போராட்டம் நடக்கவுள்ளதை அறிந்து பேரானந்தம் கொண்டேன். எனக்கு அந்தச் செய்தி மிகவும் பெருமையாகவும் மகிழ்ச்சியாகவும் இருந்தது. இந்த நாட்டு மக்கள் வீரத்தனமாகச் செயல்படத் தொடங்கிவிட்டார்கள் என்று அளவில்லா ஆனந்தம் கொண்டேன். ஆனால், இங்கே வந்து பார்த்த பிறகுதான் சிலையைச் சிதற வைத்து அழிக்காமல் ஏதோ அகிம்சைப் போராட்டம் என்று பொம்பளைத் தனமான போராட்டம் ஒன்று நடக்கப் போவதை அறிந்து ஏமாந்தேன்.''

எரிமலையைப் போல் அனல் கக்கி இறுதியில் அவர்கள் நடத்தவிருந்த போராட்டத்தை 'பொம்பளைத் தனமான போராட்டம்' என்று ஏளனமாகக் குறித்த சையதுவை எல்லோரும் சினத்தோடு நோக்கினர்.

''சையது, காந்தியடிகளின் அறப் போராட்டத்தைப் பற்றி உனக்கு அதிகமாகத் தெரியாததால் இப்படி ஏளனமாகப் பேசுகிறாய். படைபலம் மிக்க பிரிட்டிஷ் ஆட்சியாளர்கள் இன்று காந்தியாரின் சத்யாக்கிரகத்தையும், ஒத்துழையாமை இயக்கத்தையும் கண்டு நடுங்கிக் கொண்டிருக்கிறார்கள். எங்கள் போராட்டம் அவர் காட்டும் அறப்போராட்டப் பாதையில் அமைந்தது. காந்தியடிகளின் தலைமையில் இன்று இல்லாவிட்டாலும் நாளை நம்முடைய தலைமுறையிலேயே இந்தியாவுக்கு விடுதலை கிடைக்கத்தான் போகிறது. அதை நீயும், நானும் பார்க்கத்தான் போகிறோம்'' என்றார் சோமயாஜுலு.

''சரி, உங்களுடைய வழியில் எனக்கு நம்பிக்கையில்லை. உங்கள் வழி உங்களுக்கு; என்னுடைய வழி எனக்கு'' என்று சிரித்துக் கொண்டே எழுந்தான் சையது.

''இரு சையது'' என்று அவனைக் கையமர்த்திய தலைவர், ''தம்பி, உன்னுடைய திட்டம்தான் என்ன?'' என்று கேட்டார்.

வலது கரத்தை உயர்த்தி அதிலிருந்த பொட்டலத்தைக் காட்டிய சையது, 'இதுதான் என்னுடைய வழி' என்று சிரித்தான் கம்பீரமாக.

''சையது, நீ சிறிது தாமதித்து வந்திருக்கிறாய். பத்துப் பதினைந்து நாட்களுக்கு முன்பு நீ வந்திருந்தால் உன்னுடைய திட்டப்



# தளபதி திடமதி

## ஒரு துணுக்குக்குப் பரிசு ரூ. 400/-

எத்தகைய அரசியல், சமுதாயப் பிரச்னையானாலும் சரி, நமது ஆஸ்தான ஜோக்கர், தளபதி திடமதி அறிவுக் கொழுந்தான தமது கருத்தை வெளியிடாமல் இருக்க மாட்டார். ''நான் சொல்றேன் கேளுங்க...'' என்று ஆரம்பித்து அவர் என்ன சொல்வார் என்பதைத்தான் நீங்கள் ஊகித்துக் கீழே உள்ள கூப்பனில் எழுதி அனுப்புதல் வேண்டும். அடுத்த ஆறு மாதங்களுக்கு ஒவ்வொரு வாரமும் நான்கு முதல் ஆறு துணுக்குகள் வரை கல்கியில் பிரசுரமாகும். இவை ஒவ்வொன்றும் ரூ. 25 பரிசு பெறுவதுடன், ஒரே நபர் எழுதிய துணுக்குகள் அடுத்து வரும் பல இதழ்களில் பிரசுரமானால் ஒவ்வொரு முறையும் அவரது சன்மானம் இரட்டிப்பாகும். இவ்விதம் அதிகபட்சமாக ரூ. 400 வரை ஒரு துணுக்குக்குப் பரிசு கிடைக்கும் வாய்ப்பு இருக்கிறது. உறையின் மீது ''தளபதி திடமதி'' என்று குறிப்பிடுவது அவசியம்.

கூப்பன்:

22.11.87 இதழ் — முடிவு தேதி: 1.12.87.

தளபதி திடமதி: ..............................

..............................

..............................

..............................

..............................

..............................

என் பெயர்: ..............................

விலாசம்: ..............................

..............................

படியே வேலையை எளிதாக முடித்திருக்கலாம். அதற்கு எந்தவிதமான தடையும் இருந்திருக்காது. ஆனால், நாங்கள் காந்தி வழியில் அறப்போராட்டத்தைத் துவங்கியுள்ளதால் நெய்ல் சிலைக்கு இப்பொழுது காவல் போட்டிருக்கிறார்கள். ஆயுதம் தாங்கிய போலீசார் இரவும் பகலும் அதைக் காவல் புரிகிறார்கள். அதனால் உன் திட்டப்படி நீ எதையுமே இப்பொழுது செய்ய முடியாது. மீறி முயல்வது தற்கொலைக்கு ஒப்பானது. அது முட்டாள்தனமானது என்று கூட நான் நினைக்கிறேன்'' என்றார் சோமயாஜுலு.

''எது முட்டாள்தனமானது என்பதைக் காலத்தால் மட்டுமே கணிக்க முடியும்'' என்று அமைதியாகச் சிரித்த சையது, ''ஐயா உங்களுடைய திட்டம் என்ன?'' என்று கேட்டான்.

''அறிவிப்புக் கொடுத்துள்ளபடி நாளை காலை சிலைப் போராட்டத்தைத் தொடங்கப் போகிறோம். மதுரையைச் சேர்ந்த சுப்பராயலு நாயுடுவும், முகமது சாலியா ராவுத்தரும் சிலையைச் சேதப்படுத்த முயல்வார்கள்.''

சோமயாஜுலு கூறவந்ததைக் கூறி முடிப்பதற்குள் சையது அவசரம் அவசரமாகக் கேட்டான்: ''சிலையைக் காவல் காக்கும் ஆயுதப் போலீசார் இவர்களை மட்டும் சும்மா விட்டு விடுவார்களா?''

''மாட்டார்கள். இவர்கள் மீது தடியடிப் பிரயோகம் செய்வார்கள். ஆனால், இவர்கள் இருவரும் அதற்கும் அஞ்சாது முயற்சி செய்வார்கள். கடைசியில் இவர்களைக் கைது செய்து நீதி மன்றத்திற்குக் கொண்டு செல்வார்கள். நீதி மன்றத்தில் குற்றத்தை ஒப்புக் கொண்டு இவர்கள் மகிழ்ச்சியோடு சிறைத் தண்டனையை ஏற்பார்கள். அடுத்த நாள் இவர்களைப் போலவே இன்னும் இரண்டு பேர் போராடுவார்கள். இப்படியே இந்தப் போராட்டம் சிலையை ஆட்சியாளர்கள் அகற்றும் வரை நடைபெறும்.''

''அதையும் நான் பார்க்கத்தானே போகிறேன். எப்படியும் என்னுடைய திட்டப்படி செயல்பட வாய்ப்பில்லை என்று கூறி விட்டீர்கள். காலம் வரும் வரை நான் காத்திருக்கத்தானே வேண்டும்? நீங்கள் என்ன செய்யப் போகிறீர்கள் என்பதை அதுவரை நான் பார்க்கிறேன். ஒருவேளை இடையிலே என்னுடைய திட்டத்திற்கு வாய்ப்புக் கிடைத்து விட்டால் உடனுக்குடன் நான் செயல்பட்டு விடுவேன். எனக்கு என்னுடைய உயிரைப் பற்றி அக்கறையில்லை. என் கொள்ளுத் தாத்தாவுக்கும், தாத்தாவுக்கும், அப்பாவுக்கும் கிடைக்காத அருமையான வாய்ப்பு; அந்தப் படுபாவி நெய்லின் சிலையைப் பஞ்சு பஞ்சாகச் சிதற வைக்கும் பேறு எனக்குக் கிடைத்திருக்கிறது. அதை நான் பயன்படுத்திக் கொள்ள ஒவ்வொரு வினாடியும் வாய்ப்பைத் தேடிக் கொண்டே இருப்பேன்'' என்றான் சையது.

அடுத்த நாள் காலை மவுண்ட் ரோடு ஸ்பென்சர் கம்பெனிக்கு அருகே நான்கு சாலைகள் கூடிய சந்திப்பின் நடுவே அமைந்திருந்த நெய்ல் சிலை இருந்த பகுதியில் மக்கள் கூட்டம் வழிந்து காணப்பட்டது. மக்கள் கூட்டத்தைவிட சிவப்புத் தொப்பியணிந்திருந்த போலீஸ்காரர்களின் எண்

ணிக்கையே அதிகமாகக் காணப்பட்டது. நடைபாதையை ஒட்டிய பகுதிகளில் ஈட்டி ஏந்திய குதிரைப் போலீஸ் கூட்டத்தை ஒழுங்குபடுத்திக் கொண்டிருந்தது.

இராயப் பேட்டைப் பகுதியிலிருந்து அந்தச் சந்திப்பை இணைத்த சாலையின் வழியாக ஓர் ஊர்வலம் வந்து கொண்டிருந்தது. கதராலான வெள்ளை நான்கு முழ வேட்டியும் அரைக்கைச் சட்டையும் காந்திக் குல்லாவும் அணிந்திருந்த காங்கிரஸ் தொண்டர்கள், கையில் தேசியக் கொடியை ஏந்தி ஊர்வலமாக வந்து கொண்டிருந்தனர். ஊர்வலத்தில் வந்தவர்கள் அனைவருமே இருபத்தைந்து முதல் முப்பது வயதிற்குட்பட்டவர்களாகவே இருந்தனர். நாம் முந்திய தினத்தன்று சந்தித்திருந்த டாக்டர் வரதராஜுலு நாயுடு, சோமயாஜுலு இருவரும் கூட்டத்தை நடத்தி வந்தனர். பாரதியாரின் 'வந்தே மாதரம் என்போம்' பாடலை ஒருவர் வரிவரியாகப் பாட, மற்றவர்கள் அதைத் திருப்பித் திருப்பி உற்சாகமாகப் பாடிக் கொண்டே நடந்து வந்தனர். இடையிடையே 'வந்தே மாதரம்', மகாத்மா காந்திக்கு ஜே,' 'பாரத மாதாவுக்கு ஜே' முழக்கங்களை விண்ணதிரப் போட்டனர்.

ஊர்வலம் ஸ்பென்சர் கம்பெனிக்கு அருகே வந்ததும் வரதராஜுலு நாயுடுவும், சோமயாஜுலுவும், நாயுடுவுக்கும் ராவுத்தருக்கும் கதர் மாலைகளை அணிவித்தனர். 'வந்தே மாதரம்' முழங்கியது. உடன் வந்தவர்கள் நின்று கொள்ள, நாயுடுவும் ராவுத்தரும் 'மகாத்மா காந்திக்கு ஜே' என்று முழக்கிக் கொண்டு முன்னேறினர். அருகே உள்ள தொண்டரிடமிருந்து நாயுடு ஏணி ஒன்றை வாங்கிக் கொண்டார். ராவுத்தர் ஓர் உளியையும் சுத்தியலையும் வாங்கிக் கொண்டார். பிறகு இருவரும் புன்சிரிப்போடு நெய்ல் சிலை அமைந்திருந்த வட்டத்தை நோக்கி நடந்தனர்.

விரைப்பான காக்கிச் சட்டையில் மிடுக்காக இருந்த ஒரு தலைமைப் போலீஸ்காரர் நாயுடுவையும் ராவுத்தரையும் தடுத்தார்.

என்ன செய்யப் போகிறீர்கள்?''

''நேற்றே தகவல் கொடுத்திருக்கிறோமே இந்த நெய்ல் சிலை நமது நாட்டுக்கே ஒரு அவமானம். அதனால் இதை உடைக்கப் போகிறோம்.''

போலீஸ் அதிகாரி அவர்களிருவரையும் துரும்பைப் போல் நோக்கினர்.

'நீங்கள் செய்யப் போகிற குற்றத்திற்கு என்ன தண்டனை கிடைக்கும் தெரியுமா? குறைந்தது ஆறுமாத சிறைவாசம். உங்களைப் பார்த்தால் படித்த நல்ல குடும்பத்துப் பிள்ளைகளைப் போல் தோன்றுகிறீர்கள். உங்களுக்கு எதற்காக இந்த வேண்டாத வேலை? எதிர் காலத்தைப் பாழாக்கிக் கொள்ளாதீர்கள்.''

போலீஸ் அதிகாரி அறிவுரை கூறிக் கொண்டிருக்கும் போதே கண்ணிமைக்கும் நேரத்தில் நாயுடு, சிலை வட்டத்திற்குள் புகுந்து ஏணியைச் சிலை மேல் சாற்றினார். கூடவே மின்னலாகச் செயல்பட்ட ராவுத்தர் ஏணியில் ஏறித் தயாராகக் கொண்டு வந்திருந்த உளியால் சுத்தியைக் கொண்டு சிலையை உடைக்கத் தொடங்கி விட்டார்!

கையில் தடியோடு வட்டத்திற்குள் புகுந்த போலீசார் இருவரையும் தடியால் அடித்து ஏணியைப் பிடித்து இழுத்து முரட்டுத்தனமாக நெம்பித் தள்ளினர். 'மகாத்மா காந்திக்கு ஜே,' 'வந்தே மாதரம்' என்ற மந்திர ஒலியோடு, மாறி மாறி விழுந்த அடிகளை ராவுத்தரும் நாயுடுவும் தாங்கிக் கொண்டனரே தவிர வலிக் கூச்சலும் எழுப்பவில்லை; அடித்தவர்களைத் திருப்பித் தாக்கவும் முயற்சி செய்யவில்லை! வாயில் விழுந்த அடி காரணமாக ராவுத்தரின் பல் உடைந்து இரத்தம் வழிந்தது. நாயுடுவின் சட்டை கிழிந்து தொங்கி அவரை அலங்கோலமாக்கியது. ஆனாலும் இருவரும் போலீசாரை ஒரு வார்த்தை கூடத் திட்டாது, எதிர்க்காது அடிகளைத் தாங்கிக் கொண்டனர்.

பிறகு எழும்பூர் நீதி மன்றத்தில் குற்றவாளிக் கூண்டில் ராவுத்தரும் நாயுடுவும் ஏற்றப்பட்டார்கள். உடல் சோர்வுற்றிருந்த போதிலும் உள்ளம் சோர்வடையவில்லை என்பதை அவர்களுடைய மலர்ந்த முகமே காட்டிக் கொடுத்தது. அரசு வக்கீல் குற்றச்சாட்டைப் படித்ததும் நீதிபதி குற்றவாளிகள் இருவரையும் நோக்கினர்.

''உங்கள் மீது சுமத்தப்பட்ட குற்றச்சாட்டைக் கேட்டீர்களல்லவா? அதற்கு எதிராக ஏதாவது கூற விரும்புகிறீர்களா?''

''இல்லை. இச்செயலை நாங்கள் வேண்டுமென்றேதான் செய்தோம் என்பதையும், இது குற்றமென்று கருதப்பட்டால் இக் குற்றத்தை நாங்கள் செய்ததாகவே கருதுகிறோம் என்பதையும் தெரிவித்துக் கொள்கிறோம். தண்டனை கிடைக்கும் என்பதை எதிர்பார்த்தே தான் நாங்கள் இச் செயலில் இறங்கினோம். இதற்கு விதிக்கப்படும் எந்தத் தண்டனையையும் ஏற்க நாங்கள் மகிழ்ச்சியாகக் காத்திருக்கிறோம்'' என்று இருவரும் கம்பீரமாகக் கூறிய பதில் நீதிபதியைத் திகைக்க வைத்திருக்க வேண்டும்.

''சிறைவாசம் என்பது நீங்கள் நினைத்துக் கொண்டிருப்பது போல் விளையாட்டு மைதானம் போன்றது அல்ல. புத்திசாலித்தனமாக நடந்து கொள்ளுங்கள். செய்தது தவறு என்றும், இனி இத்தகைய தவறைச் செய்ய மாட்டோம் என்றும் மன்னிப்புக் கேட்டு எழுதிக் கொடுத்தால் உங்களுடைய இளம் வயதைக் கருதி, கடுமையாக எச்சரித்து மன்னிப்பு வழங்கப் பரிந்துரை செய்கிறேன். என்ன சொல்கிறீர்கள்?''

குற்றவாளிக் கூண்டில் கம்பீரமாக நின்று கொண்டிருந்த அந்த இளஞ் சிங்கங்கள் இரண்டும் நீதிபதியைத் துரும்பைப் பார்ப்பது போல் நோக்கினர்.

ஒரு புது நரகத்தையே உருவாக்கி மனித வேட்டையாடிய கொடுங்கோலன் நெய்லுக்கு இப்படி ஒரு சிலை நிறுவியிருப்பது குறித்து இந்த மண்ணைத் தாயகமாகக்கொண்டவர்கள் அனைவருமே வெட்கித் தலை குனிய வேண்டும். இந்தச் சிலை உடைப்பில் ஈடுபட எங்களுக்கு வாய்ப்புக் கிடைத்தது பற்றி உண்மையாகவே நாங்கள் பெருமைப்படுகிறோம்.''

இளைஞர்கள் இருவர்க்கும் பேச வாய்ப்புக் கொடுத்ததற்காக வருந்திய நீதிபதி,

அவசரம் அவசரமாகத் தமது தீர்ப்பை அளித்தார்.

"ஆறு மாதக் கடுங்காவல் தண்டனை விதிக்கிறேன்."

"பாரத மாதாவுக்கு ஜே", "மகாத்மா காந்திக்கு ஜே" என்ற முழக்கத்தினிடையே குற்றவாளிகள் இருவரையும் வேனில் ஏற்றிச் சென்றனர் போலீசார். கூட்டம் கலைந்தது.

சிலையைப் போல் நின்று கொண்டிருந்த சையதுவை சோமயாஜுலு உலுக்கினார். அவரது கைகளில் இரண்டு சொட்டுக் கண்ணீர் விழுந்து தெறித்தது!

"சையது....." என்று திகைப்போடு அழைத்த சோமயாஜுலு, "உனக்கு என்ன வாயிற்று?" என்று கேட்டார்.

"ஐயா, அறப்போருக்கு இவ்வளவு சக்தி உண்டு என்பதை முதன்முதலாக நான் இப்பொழுதுதான் உணர்ந்தேன். காந்தியடிகள் தலைமையில் இந்த நாட்டு இளைஞர்கள் ஆக்கபூர்வமாகச் சிந்திக்கத் துவங்கி விட்டார்கள். ஆயுதத்தை விட வலிமை மிக்க ஒன்று உண்டு என்ற உண்மையை உலகுக்கு இவர்கள் உணர்த்தப் போகிறார்கள். தடியடியை எதிர்க்காது, செய்த குற்றத்தை மறுக்காது விரும்பிச் சிறைத் தண்டனையை ஏற்கும் மனப் பக்குவம், வலிமை மிக்க ஆயிரம் ஆயுதங்களைவிடச் சக்தி வாய்ந்தது! மக்களின் சித்த சுத்தியை உரைத்துப் பார்த்துக் கொள்ள உதவும் மகத்தான உரை கல்லாக நெய்லின் சிலைப் போராட்டம் நடக்கிறது. அதை நான் குண்டு வைத்துத் தகர்த்து விட்டால் என்னுடைய வன்மம் மட்டுமே முடியும். ஆனால், அறப் போராட்டத்திற்குரிய காரணப் பொருளாக அது அங்கேயே இருந்தால் , இன்னும் சில காலத்திற்கு மக்களின் கூட்டுச் சக்தியை அரசினர் உணரவும், படுபாவி நெய்லின் கொடுஞ் செயல்களை இந்தத் தலைமுறையினர் அறிந்து கொள்ளவும் ஒரு அரிய வாய்ப்பாக இருக்கும். நெய்ல் இந்த நாட்டு மக்களுக்கு இழைத்த கொடுமைகளை மக்களனைவரும் அறிந்து கொண்டு இந்தச் சிலையை வெறுக்கவும், ஆங்கில ஆட்சிக்கு எதிராகக் கிளம்பவும் இந்தச் சிலையே விளம்பரமாக அமையும்."

"அப்படியானால் சிலைக்கு நீ வெடிகுண்டு வைக்கப் போவதில்லையா?"

"குண்டுக்கு மேலாக எதிரிகளைக் கலக்கிச் செயலிழக்க வைக்கும் ஒரு புது ஆயுதத்தைக் காந்தியடிகள்-கண்டு பிடித்துக் கொடுத்திருக்கும் போது, அதிலும் அதன் பெருமைகளைக் கண்ணெதிரே கண்டபிறகு, குண்டு வீசும் கட்சியை ஆதரிக்க நான் என்ன மடையனா?" என்று கேட்ட சையது, கையிலிருந்த பொட்டலத்தைக் கூவம் கால்வாயில் வீசியெறிந்து விட்டு, சோமயாஜுலுவின் கரத்திலிருந்த தேசியக் கொடியை வாங்கித் தன்னுடைய தோளில் சாற்றிக் கொண்டான்!

# பொன்னியின் செல்வன்

## அத்தியாயம் 30

## துவந்த யுத்தம்

முடிவில்லாத வழியில் குதிரைகள் போய்க் கொண்டிருப்பதாக வந்தியத்தேவனுக்குத் தோன்றியது. இந்த வைஷ்ணவன் நம்மை உண்மையில் ஏமாற்றி விட்டானா? சத்துருக்களிடம் நம்மைக் கொண்டு போய் ஒப்புவிக்கப் போகிறானா?

இருபுறமும் காடுகள் அடர்ந்திருந்தன. அவற்றுக்குள் பார்த்தால் கன்னங்கரிய பயங்கரமான இருள். அந்த இருண்ட காட்டில் என்னென்ன அபாயங்கள் என்னென்ன விதத்தில் இருக்கின்றனவோ, தெரியாது. சிறுத்தைகள், கரடிகள், யானைகள், விஷ ஜந்துக்கள், — இவற்றுடன் பகைவர்களும் மறைந்திருக்கக் கூடும்; யார் கண்டது? தெற்குத் திசையில் சோழ சைன்யம் கடைசியாகப் பிடித்திருக்கும் இடம் தம்பளைதான் என்று சொன்னார்களே? இவன் நம்மை எங்கே அழைத்துப் போகிறான்?

நல்லவேளையாக நிலா வெளிச்சம் கொஞ்சம் இருந்தது. சந்திர கிரணங்கள் வானுறவோங்கிய மரங்களின் உச்சியில் தவழ்ந்து விளையாடின. அதனால் ஏற்பட்ட சலன ஒளி சில சமயம் பாதையிலும் விழுந்து கொண்டிருந்தது. எதிரே மூன்று குதிரைகள் போவது சில சமயம் கண்ணுக்கு நிழல் உருவங்களாகத் தெரிந்தன. ஆனால் குதிரைகளின் குளம்புச் சப்தம் மட்டும் இடைவிடாமல் கேட்டுக் கொண்டிருந்தது.

திடீரென்று வேறு சில சப்தங்கள் கேட்டன. காட்டின் நடுவில் எதிர்பார்க்க முடியாத சப்தங்கள். பல மனிதக் குரல்களின் கோலாகல சப்தம். குதூகலமாக ஆடிப் பாடும் சப்தம். ஆ! அதோ மரங்களுக்கிடையில் வெளிச்சம் தென்படுகிறது. சுளுந்துகளின் வெளிச்சத்தோடு பெரிய காளவாய் போன்ற அடுப்புகள் எரியும் வெளிச்சமும் தெரிகிறது. ஆகா! இந்தக் காட்டின் நடுவே தாவடி போட்டுக் கொண்டு குதூகலமாயிருக்கும் வீரர்கள் யார்? சோழ நாட்டு

அமரர் கல்கி

வீரர்களா? அல்லது பகைவர் படையைச் சேர்ந்த வீரர்களா?



தைப் பற்றி வந்தியத்தேவன் மிகச் சொற்ப நேரம்தான் சிந்தித்திருப்பான். அந்தச் சிறிய நேரத்தில் முன்னால் போன குதிரைகள் சட்டென்று நின்றதையும் ஒரு குதிரை பளீர் என்று திரும்பியதையும் வந்தியத்தேவன் கவனிக்கவில்லை. திரும்பிய குதிரை முன்னோக்கி வந்து வந்தியத்தேவன் குதிரையை அணுகியது. அதன் மேலிருந்தவன் வந்தியத்தேவன் பக்கம் சட்டென்று சாய்ந்து ஓங்கி ஒரு குத்து விட்டான். அந்தக் குத்தின் அதிர்ச்சியினால் வந்தியத்தேவன் கதி கலங்கித் தடுமாறியபோது அவனுடைய ஒரு முழங்காலைப் பிடித்து ஓங்கித் தள்ளினான். வந்தியத்தேவன் தடால் என்று தரையில் விழுந்தான். வந்த வேகத்தில் அவன் குதிரை அப்பால் சிறிது தூரம் பாய்ந்து சென்று அப்புறம் நின்றது.

இதற்குள் அவனைத் தள்ளிய வீரன் குதிரையிலிருந்து கீழே குதித்து வந்தியத்தேவன் அருகில் வந்தான். திக்பிரமை கொண்டவனாய்த் தள்ளாடி எழுந்திருக்க முயன்ற வந்தியத்தேவனுடைய இடையிலிருந்த கத்தியைப் பறித்துத் தூர வீசி எறிந்தான். உடனே வந்தியத்தேவனுக்குப் புத்துயிர் வந்தது. அத்துடன் ஆத்திரம் பொங்கிக் கொண்டு வந்தது. ஒரு குதி குதித்து எழுந்து நின்றான். இரண்டு கைகளையும் இறுக மூடிக் கொண்டு வஜ்ரம் போன்ற முஷ்டியினால் தன்னைத் தள்ளிய ஆளைக் குத்தினான். குத்து வாங்கிக் கொண்டவன் சும்மா இருப்பானா? அவனும் தன் கைவரிசையைக் காட்டினான். இருவருக்குள்ளும்

பிரமாதமான துவந்த யுத்தம் நடந்தது. கடோத்கஜனும் இடும்பனும் சண்டை போடுவது போல் போட்டார்கள். வேடன் வேடந்தரித்த சிவபெருமானும் அர்ச்சுனனும் கட்டிப் புரண்டதைப் போல் புரண்டார்கள். திக்கஜங்களில் இரண்டு இடம் பெயர்ந்து வந்து ஒன்றோடொன்று மோதிக் கொள்வது போல் அவர்கள் மோதிக் கொண்டார்கள்.

வந்தியத்தேவனுடன் வந்த ஆழ்வார்க்கடியானும் அவர்களுக்கு முன்னால் வந்த வீரர்களும் விலகி நின்று ஆச்சரியத்துடன் பார்த்துக் கொண்டு நின்றார்கள். மரக்கிளைகளின் அசைவினால் அடிக்கடி சலித்த நிலா வெளிச்சத்தில் அவர்கள் அந்த அதிசயமான சண்டையைக் கண் கொட்டாமல் பார்த்துக் கொண்டிருந்தார்கள்.



சீக்கிரத்தில் காலடிச் சப்தங்கள் கேட்டன. கையில் கொளுத்தப்பட்ட சுளுந்துகளுடன் வீரர்கள் சிலர் மரக்கிளைகளை விலக்கிக் கொண்டு அவ்விடத்திற்கு வந்தார்கள். அப்படி வந்தவர்களும் அதிசயத்துடன் அந்தத் துவந்த யுத்தத்தைப் பார்த்துக் கொண்டு நிற்கலானார்கள். சிறிது நேரத்திற்கெல்லாம் சுற்றிலும் ஒரு பெரிய கூட்டம் கூடிவிட்டது.

கடைசியாக வந்தியத்தேவன் கீழே தள்ளப்பட்டான். அவனைத் தள்ளிய வீரன் அவன் மார்பின்மேல் ஏறி உட்கார்ந்து கொண்டு இடையில் சுற்றியிருந்த துணிச் சுருளை அவிழ்த்தான். அதற்குள்ளிருந்த ஓலையைக் கைப்பற்றினான். அதைத் தடுப்பதற்கு வந்தியத்தேவன் ஆன மட்டும் முயன்றும் அவன் முயற்சி பலிக்கவில்லை.

ஓலை அவ்வீரனுடைய கையில் சிக்கியதும் துள்ளிப் பாய்ந்து சுற்றிலும் நின்றவர்கள் பிடித்திருந்த சுளுந்து வெளிச்சத்தண்டை சென்றான். அவன் ஒரு சமிக்ஞை செய்யவும் மற்றும் இரு வீரர்கள் ஓடி வந்து வந்தியத்தேவன் தரையிலிருந்து எழுந்திருக்க முடியாமல் பிடித்துக் கொண்டார்கள்.

வந்தியத்தேவன் சொல்ல முடியாத ஆத்திரத்துடனும் தாபத்துடனும் ''பாவி வைஷ்ணவனே! இப்படிப்பட்ட சிநேகத் துரோகம் செய்யலாமா! அவனிடமிருந்து அந்த ஓலையைப் பிடுங்கு!'' என்று கத்தினான்.

''அப்பனே! என்னால் அது இயலாத காரியம் ஆயிற்றே!'' என்றான் ஆழ்வார்க்கடியான்.

''சீச்சீ! உன்னைப் போன்ற கோழையை நான் பார்த்ததேயில்லை! உன்னை வழித் துணைக்கு நம்பி வந்தேனே?'' என்றான் வந்தியத்தேவன்.

ஆழ்வார்க்கடியான் குதிரையிலிருந்து சாவதானமாக இறங்கி வந்தியத்தேவன் அருகில் சென்று, அவன் செவியில், ''அட அசடே! ஓலை நீ யாருக்குக் கொண்டு வந்தாயோ, அவரிடந்தான் போயிருக்கிறது! ஏன் வீணாகப் புலம்புகிறாய்?'' என்றான்.

சுளுந்து வெளிச்சத்தில் ஓலையைப் படித்துக் கொண்டிருந்த வீரனுடைய

முகத்தை மற்ற வீரர்கள் பார்த்து விட்டார்கள். உடனே ஒரு மகத்தான குதூகல ஆரவாரம் அவர்களிடமிருந்து எழுந்தது.

"பொன்னியின் செல்வர் வாழ்க! வாழ்க!"

"அன்னிய மன்னரின் காலன் வாழ்க!"

"எங்கள் இளங்கோ வாழ்க!"

"சோழகுலத் தோன்றல் வாழ்க!"

என்பன போன்ற கோஷங்கள் எழுந்து அந்த வனப் பிரதேசமெல்லாம் பரவின. அவர்களுடைய கோஷங்களின் எதிரொலியே போல் மரக்கிளையில் தூங்கிக் கொண்டிருந்த பட்சிகள் விழித்தெழுந்து இறகுகளைச் சடசடவென்று அடித்துக் கொண்டு பலவித ஒலிகளைச் செய்தன.

இதற்கு முன் வந்திருந்தவர்களைத் தவிர இன்னும் பல வீரர்களும் என்ன விசேஷம் என்று தெரிந்து கொள்வதற்காகத் திடுதிடுவென்ற சப்தத்துடனே மரஞ்செடி கொடிகளை விலக்கிக் கொண்டு ஓடி வந்தார்கள். கூட்டம் பெருகுவதைக் கண்ட வீரன் சுற்றிலும் ஒரு முறை திரும்பிப் பார்த்து, "நீங்கள் அனைவரும் பாசறைக்குச் செல்லுங்கள். விருந்துக்கு வேண்டிய ஏற்பாடு செய்யுங்கள். சற்று நேரத்துக்குள் நான் வந்து விடுகிறேன்" என்று சொல்லவே, அவர்கள் எல்லாரும் ஒரு மனிதனைப் போல் விரைந்து அவ்விடம் விட்டுப் போய் விட்டார்கள்.

நன்றாகக் குத்தும் அடியும் பட்ட வந்தியத்தேவன் தரையில் உட்கார்ந்தபடி இதையெல்லாம் பார்த்துக் கொண்டிருந்தான். உடம்பில் அடிபட்ட வலியெல்லாம் மறந்துவிடும்படியான அதிசயக் கடலில் அவன் மூழ்கியிருந்தான்.

"ஆகா! இவர்தானா இளவரசர் அருள்மொழி வர்மர்! இவர் கையிலே தான் எவ்வளவு வலிவு! என்ன விரைவு! குட்டுப்பட்டாலும் மோதிரக் கையால் குட்டுப்பட வேண்டும் என்பார்களே! குத்துப்பட்டால் இவர் கையினால் அல்லவா குத்துப்படவேண்டும்! இவரிடம் அர்ச்சுனனுடைய அழகும் கம்பீரமும் இருக்கிறது! பீமசேனனுடைய தேக பலம் இருக்கிறது! நாடு நகரமெல்லாம் இவரைப் போற்றிப் புகழ்வதில் ஆச்சரியம் ஒன்றுமில்லைதானே!" என்று எண்ணமிட்டுக் கொண்டிருந்தான்.

இந்தக் கதைக்குப் பெயர் அளித்த அரசிளங்குமாரரை, தமிழகத்தின் சரித்திரத்திலேயே இணை யாரும் சொல்ல முடியாத வீராதி வீரரை, சோழ மன்னர் குலத்தை அழியாப் புகழ்பெற்ற அமரர் குலமாக்கினவரை, பின்னால் இராஜ ராஜர் என்று பெயர் பெறப் போகும் அருள்மொழி வர்மரை, இவ்விதம் சமயமில்லாத சமயத்தில் அசந்தர்ப்பமான நிலைமையில், இராஜகுலச் சின்னம் எதுவும் இல்லாமல் நேயர்களுக்கு அறிமுகம் செய்து வைக்கும்படி நேர்ந்துவிட்டது. இது நேயர்களுக்குச் சிறிது மனக்குறை அளிக்கக் கூடியது இயற்கைதான்! ஆயினும் என்ன செய்யலாம்? நம் கதாநாயகனாகிய வந்தியத்தேவனே இப்போதுதான் அவரை முதன் முதலில் சந்தித்திருக்கிறான் என்றால், நாம் எப்படி அவரை முன்னதாகப் பார்த்திருக்க முடியும்!

அருள்மொழித் தேவர் வந்தியத்தேவனை நோக்கிச் சமீபத்தில் வந்தார். மீண்டும் அவருடைய கைமுஷ்டியின் பலத்தைச் சோதிக்க வருகிறாரோ என்று வந்தியத்தேவன் ஒருகணம் திடுக்கிட்டுப் போனான்.

ஆனால் அவருடைய புன்னகை ததும்பிய மலர்ந்த முகத்தைப் பார்த்து அந்தச் சந்தேகத்தை மாற்றிக் கொண்டான்.

"அன்பரே! வருக! வருக! அழகிய இலங்கைத் தீவுக்கு வருக! சோழநாட்டு வீராதி வீரர்களுடனே சேர்வதற்கு இத்தனை தூரம் கடல் கடந்து வந்தீர் அல்லவா? அப்படி வந்த உமக்கு நான் அளித்த வீர வரவேற்பு திருப்தி அளித்திருக்கிறதா? அல்லது அது போதாது, இன்னும் சிறிது படாடோபமான வரவேற்பு அளிக்க

வேண்டும்என்று கருதுகிறீரா?'' என்று இளவரசர் கூறிப் புன்னகை பூத்தார்.

வந்தியத்தேவன் குதித்து எழுந்து வணக்கத்துடன் நின்று, ''இளவரசே! தங்கள் தமக்கையார் அளித்த ஓலை தங்களிடம் சேர்ந்து விட்டது. என் கடமையும் தீர்ந்து விட்டது. இனி இந்த உயிரைக் காப்பாற்றிக் கொள்ள வேண்டிய அவசியம் எனக்கில்லை. தங்களுக்கு விருப்பமானால் இன்னும் சிறிது நேரம் நாம் யுத்த காண்டம் படித்துப் பார்க்கலாம்!'' என்றான்.

''ஆகா! உமக்கு என்ன சொல்வதற்கு? உம் உயிரைப் பற்றி இனி உமக்குக் கவலையில்லை. அந்தக் கவலை இனி என்னுடையது. இல்லாவிடில் நாளைக்கு இளையபிராட்டிக்கு என்ன மறுமொழி சொல்வேன், நண்பரே! இப்போது நான் படித்த ஓலை என் தமக்கையாரின் திருக்கரத்தினாலேயே எழுதப்பட்டதாகத் தெரிகிறது. அவர் உம்மிடம் அதை நேரில் கொடுத்தாரா?'' என்று கேட்டார்.

''ஆம், இளவரசே! இளையபிராட்டியின் திருக்கரங்களிலிருந்து நேரில் இந்த ஓலையைப் பெறும் பாக்கியம் எனக்குக் கிடைத்தது. பின்னர் எங்கும் நிற்காமல் இரவு பகல் பிரயாணம் செய்து வந்தேன்'' என்றான்.

''அது நன்றாய்த் தெரிகிறது. இல்லாவிடில் இவ்வளவு விரைவில் இங்கு வந்திருக்க முடியுமா? இப்படிப்பட்ட அரிய உதவி செய்தவருக்கு நான் என்ன கைம்மாறு செய்யப் போகிறேன்!'' என்று சொல்லிவிட்டு, இளவரசர் வந்தியத்தேவனை மார்புற அணைத்துக் கொண்டார். அப்போது வந்தியத்தேவன் சொர்க்கலோகத்தில்தான் இருப்பதாகவே எண்ணினான். அவன் உடம்பிலிருந்த வலியெல்லாம் மாயமாய் மறைந்து விட்டது.

## அத்தியாயம் 31

# ''ஏலேல சிங்கன்'' கூத்து

வனத்தின் மத்தியில் உலர்ந்த குளத்தைச் சுற்றி மரங்கள் வளைவு வரிசையாக வளர்ந்து அதனால் இடைவெளி ஏற்பட்டிருந்த இடத்தில் சுமார் ஆயிரம் சோழ வீரர்கள் தாவடி போட்டிருந்தார்கள். அவர்களுடைய சாப்பாட்டுக்காகப் பெரிய பெரிய கல்லடுப்புகளில் ஜுவாலை வீசிய நெருப்பின் பேரில் பிரம்மாண்டமான தவலைகளில் கூட்டாஞ் சோறு பொங்கிக் கொண்டிருந்தது. சட்டிகளிலும் அண்டாக்களிலும் வெஞ்சனங்கள் வெந்து கொண்டிருந்தன. இவற்றிலிருந்து எழுந்த நறுமணம் அந்த வீரர்களின் நாவில் ஜலம் சுரக்கச் செய்தது. சோறு பொங்கி முடியும் வரையில் பொழுது போவதற்காக அவர்கள் ஆடல் பாடல் களியாட்டங்களில் ஈடுபட்டிருந்தார்கள். இச்சமயத்தில் அவர்களுடைய உள்ளங் கவர்ந்த அரசிளங் குமாரரும் வந்துவிடவே, அவ்வீரர்களின் குதூகலம் அளவு கடந்ததாயிற்று. அந்த எல்லைக் காவல் படையின் தளபதி மிகவும் சிரமப்பட்டு அவர்களுக்குள்ளே ஒழுங்கை நிலைநாட்டினார். எல்லாரையும் அமைதியுடன் பாதிமதியின் வடிவமான வட்டத்தில் வரிசையாக உட்காரும்படி செய்தார்.

பெரியதொரு ராட்சத மரத்தை வெட்டித் தள்ளி அதன் அடிப் பகுதியை மட்டும் பூமிக்கு மேலே சிறிது நீட்டிக் கொண்டிருக்கும்படி விட்டிருந்தார்கள். இளவரசர் வந்து அந்த அடிமரத்துச் சிம்மாதனத்தின் மீது அமர்ந்தார். இப்போது அவர் யானைப் பாகன்போல் உடை தரித்திருக்கவில்லை. தலையில் பொற்கிரீடமும், புஜங்களில் வாகுவலயங்களும், மார்பில் முத்துமாலைகளும் அணிந்து, அரையில் பட்டுப் பீதாம்பரம் தரித்து அமர்ந்திருந்தார். அவரைச் சுற்றி

எல்லைக் காவல் தளபதியும் வந்தியத் தேவனும் ஆழ்வார்க்கடியானும் உட்கார்ந்திருந்தார்கள்.

இளவரசரை மகிழ்விப்பதற்காக ஏற்பாடு செய்திருந்த ஏலேல சிங்கன் சரித்திரக் கூத்து ஆரம்பமாயிற்று.

இந்தச் சமயம் சோழ வீரர்கள் இலங்கையில் பெரும் பகுதியைப் பிடித்திருந்ததுபோல் ஆயிரம் ஆண்டுகளுக்கு முன்னால் ஒரு தடவை தமிழ் வீரர்கள் ஈழ நாட்டைக் கைப்பற்றியிருந்தார்கள். அப்போது அத்தமிழ் வீரர்களின் தலைவனாக விளங்கியவன் ஏலேல சிங்கன். அவனால் துரத்தப்பட்டு இலங்கை அரசன் சில காலம் மலைநாட்டில் போய் ஒளிந்திருந்தான். அவனுடைய இளம் புதல்வனின் பெயர் துஷ்டகமனு. இவன் பொல்லாத வீரன். இலங்கையைத் திரும்பவும் ஏலேல சிங்கனிடமிருந்து கைப்பற்ற வேண்டுமென்று நெடுங்காலம் கனவு கண்டான். அவ்வீரன் சிறுபிள்ளையாயிருந்த போது ஒரு நாள் படுக்கையில் கையையும், காலையும் மடக்கி ஒடுக்கி வைத்துக் கொண்டு படுத்திருந்தான். அவனுடைய அன்னை "குழந்தாய்! ஏன் இப்படி உன்னை நீயே குறுக்கிக் கொண்டு படுத்திருக்கிறாய்? தாராளமாய்க் காலையும் கையையும் நீட்டிவிட்டுப் படுத்துக் கொள்வதுதானே!" என்றாள். அப்போது துஷ்டகமனு "தாயே! என்னை ஒரு பக்கத்தில் தமிழ்வீரர்கள் நெருக்குகிறார்கள்; மற்றொரு பக்கத்தில் கடல் நெருக்குகிறது. நான் என்ன செய்வேன்? அதனாலேயே உடம்பைக் குறுக்கிக் கொண்டு படுத்திருக்கிறேன்!" என்றான். இத்தகைய வீரன் காளைப் பருவம் அடைந்தபோது படை திரட்டிக்கொண்டு ஏலேலசிங்கனுடன் போருக்குச் சென்றான். அவன் கொண்டு போன படைகள் சின்னபின்னமாகிச் சிதறி ஓடிவிட்டன. அப்போது துஷ்டகமனு ஒரு யுக்தி செய்தான். ஏலேல சிங்கன் இருக்குமிடம் சென்று நேருக்கு நேர் நின்று, "அரசே! தங்களுடைய பெரிய சைன்யத்துக்கு முன்னால் என்னுடைய சிறிய படை சிதறி ஓடி விட்டது. நான் ஒருவனே மிஞ்சியிருக்கிறேன். தாங்கள் சுத்த வீரர் குலத்தில் பிறந்தவர். ஆதலின் என்னுடன் தனித்து நின்று துவந்த யுத்தம் செய்யும்படி அழைக்கிறேன். நம்மில் வெற்றி அடைபவருக்கு இந்த இலங்கா ராஜ்யம் உரியதாகட்டும்; மற்றவருக்கு வீரசொர்க்கம் கிடைக்கட்டும்!" என்று சொன்னான்.

துஷ்டகமனுவின் அத்தகைய துணிச்சலையும் வீரத்தையும் ஏலேல சிங்கன் மிக வியந்தான். ஆகையால் அவனுடன் தனித்து நின்று போர் செய்ய ஒப்புக் கொண்டான். இடையில் வந்து குறுக்கிட வேண்டாம் என்று தன் வீரர்களுக்குக் கண்டிப்பாகக் கட்டளையிட்டான். துவந்த யுத்தம் ஆரம்பமாயிற்று. இந்தச் செய்தியை அறிந்து சிதறி ஓடிய துஷ்டகமனுவின் வீரர்களும் திரும்பி வந்து சேர்ந்தார்கள். எல்லாரும் கண் கொட்டாமல் பார்த்துக் கொண்டிருந்தார்கள். நெடுநேரம் போர் நடந்தது. துஷ்டகமனுவோ தன்னுடைய பிறப்புரிமையைப் பெறும் பொருட்டு ஆத்திரத்துடன் சண்டையிட்டான். ஏலேல சிங்கன் அந்த இளைஞனிடம் அனுதாபம் கொண்டிருந்த படியால் பூரண வலிவையும் பிரயோகித்துப் போர்



அருள்வாக்கு

**ஊரிலே பலவிதமான அயோக்கியர்கள் இருக்கிறார்கள். அதைப் பார்த்து வாஸ்தவமாகவே ஒருவனுடைய மனசு கொதிக்கிறது. அவன் அந்தத் தப்பையெல்லாம் ஓயாமல் சொல்லிக் கொண்டிருக்கிறான். 'அவன் அந்த அயோக்கியத்தனத்தைச் செய்தான், இவன் இந்த அயோக்கியத்தனத்தைச் செய்தான்' என்று சொல்லிக் கொண்டே இருக்கிறான். இவனுக்கு வாக்கும் மனசும் ஒன்றாகத்தான் இருக்கிறது. ஆனால் இவன் இப்படிச் சொல்வதால் இவனுக்கும் பிரயோஜனமில்லை, ஜனங்களுக்கும் பிரயோ**

ஜனமில்லை. தப்புச் செய்கிறவர்களுக்கும் பிரயோஜனமில்லை. இப்படி வியர்த்தமாக வாக்கும் மனசும் ஒன்றுபட்டிருப்பதை சத்தியம் என்று சொல்வதற்கில்லை.

ஒருவன் மனத்தில் கெட்ட எண்ணங்கள் எழுகின்றன. அதை அவன் அப்படியே வாக்கிலே வெளியிடுகிறான். அது சத்தியமாகி விடுமா? ஆகாது.

ஆகவே சத்தியம் என்றால் வாக்கும் மனசும் ஒன்றுபடுவது மட்டுமல்ல. நல்ல மனசிலே தோன்றுகின்ற நல்ல எண்ணங்களை வாக்கில் சொல்வதே சத்தியம். நல்ல விளைவுகளை உண்டாக்குவதே சத்தியம்.

மக்களுக்கு நன்மை பயப்பதாகவும் பிரியமாகவும் எது இருக்கிறதோ, அதுவே சத்தியம் என்பதாகச் சத்தியத்துக்கு ஒரு லட்சணத்தை வகுத்திருக்கிறார்கள்.

ஸத்யம் பூதஹிதம் ப்ரியம்

பேச்சினாலும் காரியத்தினாலும் எண்ணத்தினாலும் பிராணிகளுக்கு நன்மையை உண்டாக்குவதே சத்தியம்; கெடுதல் செய்வதெல்லாம் அசத்தியமே.

ஒருவனுக்கு நல்லதைச் சொன்னால் மட்டும் போதாது. அதை அவன் ஏற்றுக் கொள்ளுமாறு அன்புடன் சொல்ல வேண்டும். நல்லதைக் கூடக் கடுமையாகச் சொன்னால் அதை யாரும் ஏற்க மாட்டார்கள். இவ்வாறு நிஷ்பலனாகப் போகிற நல்ல வாக்கு சத்தியமாகாது. நல்லதாகவும் இருக்க வேண்டும். அது யாரை உத்தேசித்துச் சொல்லப்படுகிறதோ அவனுக்கு இன்பம் தரும் விதத்தில் ஹிதமாகவும் சொல்லப்பட வேண்டும். இதுவே சத்தியம்.

சத்தியத்தைச் சொல். பிரியமானதைச் சொல். சத்தியத்தைப் பிரியமாகச் சொல்ல முடியவில்லை என்றால் அப்போது அப்படிப் பட்ட சத்தியத்தையும் சொல்லாதே. கேட்கப் பிரியமாயிருந்தாலும் அசத்தியத்தைச் சொல்லாதே' என்பது பெரியோர் வாக்கு.

காமமும் குரோதமும் உள்ள மனத்திலிருந்து இப்படிப்பட்ட பிரியமான நன்மையான வாக்கு வராது. க்ஷேமத்தையே உண்டாக்கும் சத்திய வாக்கு வரவேண்டுமானால் அதற்கு அடிப்படையாக, காம, குரோதங்களற்ற நல்ல மனம் வேண்டும்.

— ஜகத்குரு காஞ்சி காமகோடி ஸ்ரீ சந்திரசேகரேந்திர சரஸ்வதி சங்கராச்சாரிய சுவாமிகள்.

செய்யவில்லை. ஆகையால் முடிவில் ஏலேல சிங்கன் இறந்தான். துஷ்டகமனு முடி சூடியதும், ஏலேல சிங்கன் இறந்த இடத்தில் அவனுக்குப் பள்ளிப் படைக் கோயில் எழுப்பி அவனுடைய வீரத்தையும் தயாளத்தையும் போற்றினான்.



ந்த அரிய சரித்திர நிகழ்ச்சியைச் சோழ வீரர்கள் இளங்கோ அருள்வர்மரின் முன்னிலையில் நடனக் கூத்தாக நடித்துக் காட்டினார்கள். ஆடலும் பாடலும் அமர்க்களப்பட்டன. ஏலேல சிங்கன் உயிர் துறந்து விழுந்த இடத்தில் நடித்த வீரன் உண்மையிலேயே செத்து விழுந்து விட்டானோ என்று தோன்றும்படி அவ்வளவு தத்ரூபமாக நடித்தார்கள். பார்த்துக் கொண்டிருந்த இளவரசரும் மற்ற வீரர்களும் அடிக்கடி 'ஆஹா'காரம் செய்து குதூகலித்தார்கள்.

நாடகம் நடந்து கொண்டிருந்த போது ஒருமுறை இளவரசர் ஆழ்வார்க்கடியானைப் பார்த்து, "திருமலை! தம்பளைக் குகைக் கோயிலில் துஷ்டகமனுவுக்கும் ஏலேல சிங்கனுக்கும் நடந்த போர்க் காட்சியை அழியாத வர்ண சித்திரமாக வரைந்திருக்கிறதே, அந்தச் சித்திரத்தை நீங்கள் பார்த்தீர்களா?" என்று கேட்டார்.

"இல்லை, ஐயா! தம்பளை வீதிகளில் நாங்கள் வந்து கொண்டிருந்த போதே தங்களைப் பார்த்துவிட்டேன். குகைக் கோயிலுக்குள் போக நேரமில்லை" என்றான் ஆழ்வார்க்கடியான்.

"ஆகா! அந்த குகைக் கோயில்களிலே உள்ள சிற்பங்களையும் அவசியம் பார்க்க வேண்டும்! திருமலை! நம் செந்தமிழ்நாட்டில் எவ்வளவோ சிற்ப சித்திரங்கள் இருக்கின்றன. அவற்றைக் காட்டிலும் மகத்தான அற்புதங்கள் இந்த இலங்கைத் தீவில் இருக்கின்றன!" என்றார் இளவரசர்.

"இளவரசே! இந்த நாட்டிலுள்ள சிற்ப சித்திரங்கள் எங்கும் போய்விட மாட்டா! எப்போது வேணுமானாலும் பார்த்துக் கொள்ளலாம். ஆனால் தங்களைப் பார்ப்பது அப்படியல்லவே? நல்ல சமயத்தில் நாங்கள் வந்ததினால் அல்லவோ பார்க்க முடிந்தது? எங்

களுக்கு முன்னாலேயே இங்கு வந்த பார்த்திபேந்திர பல்லவன் தங்களைத் தேடிவிட்டு 'இங்கே இல்லை' என்று திரும்பிப் போய்க் கொண்டிருந்தான். வழியில் அவனை நாங்கள் பார்த்தோம்'' என்றான் ஆழ்வார்க்கடியான்.

''ஆம்; என் தமையனாரின் அருமை நண்பர் வந்து தேடிவிட்டுப் போன தாகத் தளபதிகூடச் சொன்னார். அவர் எதற்காக வந்திருப்பார் என்று உன்னால் ஊகித்துச் சொல்ல முடியுமா?''

''நிச்சயமாகவே சொல்ல முடியும். தங்களைக் காஞ்சிக்கு அழைத்து வரும்படியாக ஆதித்த கரிகாலர் அவரை அனுப்பி வைத்திருக்கிறார்.''

''அடேடே! உனக்குத் தெரிந்திருக்கிறதே! இதோ உன் சிநேகிதன் இவ்வளவு பத்திரமாகக் கொண்டு வந்து ஒப்புவித்தானே, இந்த ஓலையில் என்ன எழுதியிருக்கிறதென்றும் உனக்குத் தெரியும் போலிருக்கிறது?''

''தங்களை உடனே பழையாறைக்கு வந்து சேரும்படி தங்கள் தமக்கையார் எழுதியிருக்கிறார்கள். இளவரசே! குந்தவை தேவி அந்தரங்கமாக இந்த ஓலையை எழுதி நம் வாணர் குல வீரரிடம் கொடுத்தபோது பக்கத்திலிருந்த கொடி வீட்டில் மறைந்திருந்து நான் பார்த்துக் கொண்டிருந்தேன்......''

திருமலைக்குப் பின்னாலிருந்த வந்தியத் தேவன் அவனுடைய முதுகில் அழுத்தமாகக் கிள்ளினான்.

ஆழ்வார்க்கடியான் தன் முதுகில் ஓங்கி அறைந்து, ''இது பொல்லாத காடு; இரவு நேரத்திலே கூட வண்டு கடிக்கிறது!'' என்றான்.

இளவரசர் சற்றுக் கோபத்துடன் ''சேச்சே! இது என்ன வேலை? என் அருமைத் தமக்கையார் பேரிலேயே நீ உன் திறமையைக்காட்டத்தொடங்கி விட்டாயா?'' என்றார்.

''அதை நான் பார்த்திருந்தபடியினால்தான் இவனை இவ்வளவு பத்திரமாக இங்கே கொண்டு வந்து சேர்த்தேன். இளவரசே! இவன் வழியிலெங்கும்சங்கடத்தில்மாட்டிக்கொள்ளாமல் காப்பாற்றிக் கொண்டு வருவதற்கு நான் பட்ட பாட்டைப் புத்த பகவானே அறிவார். அநுராதபுரத்தின் வழியாக வந்திருந்தால் இவன் நிச்சயமாக இங்கு வந்து சேர்ந்திருக்க மாட்டான். வழியில் யாருடனாவது சண்டை பிடித்துச் செத்திருப்பான். அதனாலே காட்டு வழியாக அழைத்து வந்தேன். அங்கேயும் இவன் ஒரு மத யானையுடன் சண்டை பிடிக்கப் பார்த்தான். என்னுடைய கைத்தடியால் அந்த மதயானையைச் சம்ஹாரித்து இவனைத் தங்களிடம் பத்திரமாய்க் கொண்டு வந்தேன்!'' என்றான்.

''ஓஹோ! அப்படியானால் இவனைப் பத்திரமாகக் கொண்டு வந்து என்னிடம் சேர்ப்பதற்காகவே நீ இலங்கைக்கு வந்தாயா, என்ன?''

''இல்லை, ஐயா! என் பங்குக்கு நானும் தங்களுக்கு ஒரு செய்தி கொண்டு வந்திருக்கிறேன்.''

''அது என்ன? சீக்கிரம் சொல்!'' என்றார் இளவரசர்.

''முதன் மந்திரி அநிருத்தர் தாங்கள் இலங்கையிலேயே இன்னும் சிறிது காலம் இருப்பது உசிதம் என்று சொல்லி அனுப்பியிருக்கிறார்.''

''இப்படி மூன்று மூத்தவர்கள் மூன்று விதமாகச் செய்தி அனுப்பினால் நான் எதையென்று கேட்பது?'' என்றார் அருள்மொழி வர்மர்.

இச்சமயத்தில் வந்தியத்தேவன் குறுக்கிட்டு, ''இளவரசே! மன்னிக்க வேண்டும்! தாங்கள் கேட்க வேண்டியது தங்கள் தமக்கையாரின் வார்த்தையைத்தான்!'' என்றான்.

''ஏன் அவ்விதம் சொல்லுகிறீர்?''

''ஏனெனில், தங்கள் தமக்கையின் வார்த்தைக்கே மதிப்புக் கொடுக்க வேண்டும் என்று தங்கள் இருதயம் தங்களுக்குச் சொல்கிறது. அப்படித் தாங்கள் அவர் வார்த்தையைக் கேட்கா விட்டாலும், நான் கேட்டே தீர வேண்டும். தங்களை எப்படியும் அழைத்துக் கொண்டு வரும்படியாக இளையபிராட்டி எனக்குப் பணித்திருக்கிறார்!'' என்றான் வந்தியத்தேவன்.

இளவரசர் வந்தியத்தேவனை ஏற இறங்கப் பார்த்துவிட்டு, ''இத்தகைய ஒரு வீரத் தோழன் கிடைக்க வேண்டுமேயென்று எத்தனையோ நாளாக நான் தவம் செய்து கொண்டிருந்தேன்!'' என்றார்.

(தொடரும்)

# க்ளினிக் ஸ்பெஷல் ஷாம்பூ பொடுகினை எதிர்த்து அகற்றுகிறது. எனவே நீங்கள் அனைவரையும் கவர முடிகிறது.




HLL-2607

பொடுகின் காரணமாக எவரையும் கவர முடியாமற் போனால், ஒரு ஸ்பெஷலிஸ்ட் ஷாம்பூவைப் பயன் படுத்தும் வேளை வந்துவிட்டது என்று பொருள். க்ளினிக் ஸ்பெஷல் ஷாம்பூ. இதன் மென்மை நுரை கேசத்தைக் கழுவுகிறது; அடங்கியுள்ள சிறப்புப் பொருள் பொடுகினைக் கட்டுப்படுத்துகிறது. உங்கள் கேசம் அழகு பெறுகிறது. சுத்தமாகவும், ஆரோக்கிய மாகவும், அரிப்பற்றும் திகழ்கிறது.

## க்ளினிக் ஸ்பெஷல்

## ஷாம்பூ.

பொடுகற்ற, சுத்தமான, ஆரோக்கியமிக்க கேசத்திற்கு.

இந்துஸ்தான் லீவர் லிமிடெடின் தரமிக்க தயாரிப்பு.

அவர்கள் இருவரும் சத்திரத்தை அடைந்ததும் முதல் காரியமாகத் தங்களின் பைச்சுமைகளை உள்ளே இறக்கி வைத்தனர்.

ஆறுமுகம் தம் குடும்பத்துடன் வருடந்தோறும் பங்குனி உத்திரத் திருவிழாவிற்காகப் பழனிக்கு வருவது வழக்கம். கைத்தறி நெசவுத் தொழிலாளியான ஆறுமுகம் கோவில்களுக்குச் செல்வதில் எப்போதும் பிரியமாக இருந்தார். தமக்கும் தம் மூன்று பிள்ளைகளுக்கும் நல்ல உடல்நலத்தையே அவர் கடவுளிடம் பிரதானமாக வேண்டுவார். சில சமயங்களில், அப்போதைய தொழில் நெருக்கடி பற்றியும், அதாவது நூல் விலை ஏறிப் போனது, சரக்குகள் வாங்க ஆள் இல்லாமல் தேங்கிப் போவது.... போன்ற பொதுப் பிரச்னைகளையும் கடவுளிடம் கொண்டு செல்வதுண்டு!

ஆறுமுகம் பழனிக்கு வரும்போதெல்லாம் தமக்கும் தமது மகனுக்கும் மொட்டை போட்டுக் கொண்டு, அதன் திருப்தியான சந்தோஷ அனுபவத்துடன் ஊருக்குத் திரும்பிச் செல்வார். அவருக்கு ஒரு மகனை தவிர, இரண்டு மகள்களும் உண்டு.

''கொண்டு வந்தது எல்லாத்தையும் முதல்ல சரி பாரு....''

ஆறுமுகத்தின் வார்த்தைகள் தன் காதில் விழுந்ததும் அவர் மனைவி சட்டெனக் குனிந்து, பைகளைத் துழாவி, ஒவ்வொன்றும் வெளியில் எடுத்து வைத்தாள்.

அவர்கள் கொண்டு வந்தது மொத்தம் மூன்று துணிப்பைச் சுமைகள்; இரண்டில் அவர்களுக்கு வேண்டிய சாப்பாடு இருந்தது. மற்றதில் அவர்கள் எல்லோருக்கும் வேண்டிய மாற்று உடைகள் இருந்தன.

அவர் மனைவி அங்கிருந்த துணிகளை மேலும் மேலும் சோதனை போட்டுக் கொண்டே இருந்தாள். தனித்தனியே ஒவ்வொரு துணியையும் தன் சேலை, அவரது வேட்டி என உதறி உதறிப் பார்த்தாள். அவள் முகத்தில், சந்தேகத்தின் எல்லை வர வரப் பெரிதாகிக் கொண்டே போய், முடிவில் அது மறைந்து, புதிதாகக் கவலையும், பயமும் தீவிரமாகச் சூழ்ந்து கொண்டன.

அவளது செய்கைகளையும், அதன் காரணமான மௌனத்தையும் கண்ட ஆறுமுகம் சற்றுக் கோபமாகவே கேட்டார் —

''அதான்... அப்பவே, கௌம்பற முன்னாலேயே சொல்லிக்கிட்டு இருந்தேன், எல்

# ஏமாற்றம்



லாத்தையும் சரியா எடுத்து வச்சுக்கிட்ட யான்னு. நீதான் அதெல்லாம் சரியா இருக்குன்னு சொன்னே. இப்ப என்னத்தக் காணும்னு தேடுத?"

தன் குற்ற உணர்ச்சியினால் வெட்கப்பட்டவளாய், அவரை நோக்கிப் பார்த்துப் பதில் சொல்ல முடியாமல், அவள் இன்னும் தலை குனிந்தே, ஏதோ தேடுகிற பாவனையில் இருந்தாள்.

கைகளால் மீண்டும் மீண்டும் துணிகளைத் துப்பறிந்து கொண்டே சொன்னாள்—

''துண்டுதான்.... எங்கன போச்சுன்னு தெரியல....

இதைச் சொல்லும்போது அவளின் குரலில் வருத்தமும், மன்னிப்புக் கோரும் உணர்ச்சியும் மிகுந்திருந்தன. நிமிர்ந்து நின்று கொண்டாலும், அவரை நேருக்கு நேராகப் பார்ப்பதற்கு அஞ்சினாள்.

''போ... துண்டக் காணுமா.... நாளைக்குக் காலையில மொட்டை போட்டுக் குளிச்ச பெறகு, தலயத் துவட்ட துண்டுக்கு என்ன செய்ய?''

அவளது கவலையில் பாதியை இவரும் வாங்கிக் கொண்டது மாதிரியான அமைதிக் குரலில் ஆறுமுகம் சாந்தமாய், ஆனால் மிகக் கவலையுற்றுக் கேட்கவும் அவள் சற்று பயம் தெளிந்தாள்.

''இதுக்குள்ளதான வச்சேன்'' என்று அவள் தீர்மானமாய் அழுந்தச் சொன்னாள்.

''அப்ப நான் எடுத்து வழியில காணும போட்டேன்னு சொல்றியா? நல்ல பயித்தியக் காரி நீ...'' என்று ஆறுமுகம் சற்று சினத்துடன் கூறினார்.

அந்நேரத்தில் அவர்களுடன் வந்த காளிமுத்து அவர்களுக்கு முன்பு வந்து நின்றார். பின்பு கேட்டார்—

''என்னப்பா ஆறுமுகம், என்னத்துக்கு இப்பிடி சண்ட பிடிக்கிறே?''

''ஒண்ணுமில்ல. துண்டு எடுத்தார மறந்துட்டா. அதுக்குத்தான் சத்தம் போட்டேன்''

''பூ! இதுக்குத்தானா! பேசாம ஒரு புதுத் துண்டு ஒண்ண இங்கியே எடுத்துக்கிறது தானேப்பா!''

''ஒனக்கென்ன, நீ சொல்லிட்டுப் போயிருவ! நாங்குள்ளாம் பெரிய சீமான் வீட்டுப் பிள்ள பாரு... அங்கன... நம்ம வீட்ல, அஞ்சாறு துண்டு கெடக்கு. வருசக்கணக்கா சீசன் துண்டு நெய்றவங்க நாங்க....''

ஆனால் உண்மையில் ஆறுமுகத்தின், குடும்பத்திற்கே ஒரே ஒரு துண்டுதான் வீட்டில் உள்ளது. சும்மா ஒரு 'கெத்து'க்காகச் சொன்னார்.

''ஆரோட ஏறா, பழனியில வாங்கின ஞாபகமாக இப்ப ஒண்ணு வாங்கிப் போடுப்பா. அந்த ராசியில நீயும் ஒரு பண்ணாடியா மாற மாட்ட?'' ஆறுமுகத்தின் சவடாலைப் புரிந்து கொண்டு, காளிமுத்து பதிலுக்குக் கேலி பேசினார்.

''போப்பா நீ ஒண்ணு. தெனம் குடிக்கக் கஞ்சி கெடச்சு, நோய் நொடி இல்லாம இருந்தாப் போதும்னு இருக்கு... நீ வேற?''

''சரி, சரி, நான் இப்ப பஜாருக்குப் போறேன். சோறு கொண்டாரல்ல; ஓட்டலுக்குப் போய்த்தான் சாப்பிடணும். நீயும் அப்பிடியே வர்றதுன்னா வா...''

ஆறுமுகம் சில விநாடிகள் யோசித்தார். பிறகு தீர்மானமாய்ப் பதில் சொன்னார்.

''சரி போவோம் வா. துண்டு இல்லாம நாளைக்கி எத வச்சு எல்லாரும் தலை துவட்ட?''

பின்பு ஆறுமுகம் தம் மனைவியின் பக்கமாய்த் திரும்பினார்.

''ஏத்தா... நான் போயி புதுத்துண்டு வாங்கியாறேன். நீயும் பிள்ளைகளும் சாப்பிடறதுன்னாச் சாப்பிடுங்க. நான் பெறகு சாப்பிடறேன்....'' அவர் காளிமுத்துவுடன் நகர்ந்தார்.

இருவரும் ஒரு ஜவுளிக் கடைக்குள் நுழைந்தார்கள். துண்டு வாங்கப் போவது ஆறுமுகம்தான். ஆனால் காளிமுத்துதான் மிக உற்சாகமாகவும், ஆர்வமாகவும் இருந்தார். ஆறுமுகத்தை முந்திக் கொண்டு உள்ளே சென்றார். தாம் யோசனை சொல்ல, மற்றவர் அதைக் கேட்டுக் கொண்டால் யாருக்குத்தான் சந்தோஷம் வராது?

''என்ன வேணுங்க?'' கடைக்காரர் பணிவுடன், சிரித்த முகமாய்க் காளிமுத்துவிடம் கேட்டார்.

''துண்டு பாக்கணும்....'' காளிமுத்து சொன்னார்.

முதலில் பெரிய டர்க்கி டவல்களை எடுத்துப் போட்டார் கடைக்காரர்.

''ம்ஹூம். இதெல்லாம் நம்மளுக்குத் தாங்காது.''

காளிமுத்து தம் பேச்சில் தங்களது இருவரின் பொருளாதார இயலாமையை வெளிப்படுத்தினார். இருப்பினும் அவர்கள் இருவரின் கண்களும் அந்த விசாலமான வண்ண வேலைப்பாடு அமைந்த துண்டின் மேலே ஆழப்பதிந்திருந்தன. அவர்களது கைகள் அந்தத் துண்டைப் புரட்டவும், வருடிப் பார்க்கவும் செய்தன.

காளிமுத்து அதைத் தம் கையில் எடுத்து மிகவும் உற்று நோக்கினார். அதைக் காணும் போது, அவர்கள் இருவரது கண்களும் வியப்பால் விரிந்தன.

காளிமுத்து சொன்னார்... ''எப்பிடி நெகருக்கான் பாரு. எல்லாமே சென்னூரு சரக்காக்கும்!'' பின்பு கடைக்காரரை நோக்கி, ''இதெல்லாம் சென்னூர்ல இருந்து தானே வருது?'' என்று தம் கேள்விக்கான பதிலும் தாம் நினைத்ததும் ஒன்றாக இருக்கும் என்ற சந்தோஷ உணர்வுடன் கேட்டார்.

''இல்லீங்க. இது பவானி அயிட்டமுங்க...''

கடைக்காரர் அவர்களின் நிலையைப் புரிந்து கொண்டு அந்தத் துண்டுகளைத் திரும்பி வாங்கி மடித்தவாறே பதில் சொன்னார். பிறகு வேறு வகையான துண்டுகளைப் போட்டார். ''இதப் பாருங்க... உங்களுக்குப் பிடிக்கும்!'' என்று சொல்லிக் கொண்டே நம்பிக்கையுடன் அவர்களைப் பார்த்தார்.

''இது என்ன வெலைங்க?'' இப்போது

**அபூர்வன்**

ஆறுமுகம் கேட்டார். அவரது கேள்வியின் உணர்ச்சி நிலையும், அவரது முக பாவனையும் கடைக்காரருக்கு இவர்தான் வாங்க வந்திருக்கிறார் என்ற எண்ணத்தை உறுதிப் படுத்தியது.

"இருபது ரூவா ஆகுதுங்க..." கடைக்காரர் பதிலளித்தார். ஆறுமுகம் அதை எதிர் பார்த்தவர் போல முகத்தில் எந்தவித உணர்ச்சியையும் காட்டாமல் சொன்னார், "சிசன் துண்டு எடுத்துப் போடுங்க பாப்பம்!"

கடைக்காரர் சில துண்டுகளை மேஜை மீது விரித்துப் போட்டார். தாம் கேட்டதும், தாம் வாங்க நினைத்ததும், தமக்கு முன்னால் எடுத்து வைக்கப்பட்டதும் ஆறுமுகத்தின் கண்கள் அங்கே தாவின. அவற்றில் இருந்த ஒரு சிவப்பு நிறத் துண்டை எடுத்தார். பின்பு பலவாறு அதைச் சோதனை செய்தார். முதலில் அதன் ஊடையின் நெருக்கத்தைப் பார்த்தார். பின்பு, முழுவதும் அதை விரித்துப் பார்த்தார். விரித்துப் பார்த்த படியே அதைத் தம் கண்களால் முழம் போட்டார். பின்பு கடைக்காரரிடம் கேட்டார், "என்ன வெலையுங்க இது?"

"எட்டு ரூபா ஆவுதுங்க..."— கடைக்காரர் பவ்வியமாகப் பதில் சொன்னார்.

"என்ன? எட்டு ரூபாயா?" —ஆறுமுகம் அதிர்ந்து போய்க் கேட்டார். அவரது வார்த்தைகளின் கனத்தால் தாக்குண்ட காளிமுத்து, அதுவரையிலும் அங்கிருந்த பல புது ஜவுளித் துணிகளில் பதிந்திருந்த தம் கண்களைச் சடாரென இவரது கையிலிருந்த துண்டின் மேல் பதித்தார். அப்படியே அந்தத் துண்டை ஆறுமுகத்திடமிருந்து வாங்கிக் கொண்டார்.

சில விநாடிகள் அதனை மேலும் கீழும் புரட்டி விட்டுக் காளிமுத்து சொன்னார், "இத மாதிரி நாங்களும் நெசக்கிட்டுத்தான் இருக்கோம் எங்க ஊர்ல. அங்க நாங்க நாலு ரூபாய்க்கு எத்தினியோ பேருக்குக் கொடுத்திருக்கோம்!"

பின்பு கடைக்காரர் சிரித்துக் கொண்டே, "நீங்க சொல்றது இந்த ரகமாயிருக்கும்! நீங்க கையில வச்சுருக்கிறது ஈரெழ ரகம்; இது ஒரெழ ரகம். பாருங்க..." என்று சொன்னார்.

கடைக்காரர் காட்டிய துண்டை அவசரமாய்க் கையில் எடுத்துப் பார்த்து விட்டு, ஆறுமுகம் சொன்னார்—

"ரெண்டு ரூபாய்க்கு இதே மாதிரி எத்தனை டசன் உங்களுக்கு வேணும்? நாங்கள் லாம் இதிலேயே ஊறிப் போனவங்க. பத்து வருசமா நானே இந்த ஒரே ரகத்தைத்தான் நெசகிட்டு வர்றேன்..." ஆறுமுகம் மிகவும் பெருமையாகவும், 'நீ ஏங்கிட்டயே ஏமாத்தப் பாக்குறியே!' என்கிற மாதிரி அழுத்தமான பார்வையாலும் பேசினார்.

"எங்களுக்கு அடக்கமே மூணே முக்கால் ரூபா ஆவுது. ஏதோ நாலணா லாபம் போட்டுத்தான் விக்கிறோம்..." கடைக்காரர் இன்னும் அவர்களிடம் புன்னகையுடனும், மலர்ந்த முகத்துடனும் பேசிக் கொண்டிருந்தார்.

அந்நேரம் ஆறுமுகம் அதை இன்னும் தீவிரமாகச் சோதனை செய்தார். அதன் அழுத்தமான நெசவில் சற்றும் திருப்திப் படாதவராகக் கைவிரல் நகத்தால் திரும்பத் திரும்ப அதை இழுத்துப் பார்த்தார்.

பின்பு சொன்னார், "இதுல எவ்வளவு அழுத்தம் கொறையா இருக்குன்னு பாருங்க. ஊடையைக் கொறைச்சு நெசவு வச்சிருக்கான். நீளமாவது சரியா இருக்குதா? அதுவும் கிடையாது...." என்று சொல்லிக் கொண்டே காளிமுத்து பக்கம் திரும்பி, "ஏப்பா காளி, இதக் கொஞ்சம் முழம் பிடி..." என்று அந்தத் துண்டை தாம் ஒரு புறம் இறுகப் பிடித்துக் கொண்டார். மறுபுறத்திலிருந்து காளிமுத்து அதை முழம் போட்டு வந்தார்.

ஆறுமுகம் இப்போது மிகவும் அழுந்தச் சொன்னார், "நீங்களே பாத்தீங்கள்ல. நாலு விரக்கட, அதாவது கிட்டதட்ட மூணு இஞ்சு கொறையுது. இப்பிடி ஊடையும் அலசலா இருந்து, முழமும் கட்டையா இருந்தா எவங்க நாலு ரூபாயிக்கு வாங்குவான்? அதுவும் எங்கள மாதிரி பரம்பர நெசவாளிங்ககிட்டயே எப்பிடிங்க வெலை போகும்?"

கடைக்காரர் இதற்கெல்லாம் நிலை குலைந்து விடவில்லை.

"நாங்க என்ன புதுசா உங்களுக்குன்னு வெலை சொல்றோம்! எல்லாருக்கும் ஒரே வெலைதான். இப்பக்கூட நீங்க வர்றதுக்கு முன்ன ஒருத்தர் வந்து இதே ரகத்தில் நாலு ரூபாயின்னுதான் நாலு துண்டு வாங்கிட்டுப் போனாரு" என்று சாந்தமாகவே பதில் தந்தார்.

"ம்ஹூம். இந்த வெலைக்குக் கட்டுப்படியாகதுங்க. வீட்ல இது மாதிரி அஞ்சாறு சிச் சின்னு கெடக்குது. இளம்பற போது எடுத்து வைக்க எப்பிடியோ மறந்துட்டோம். சரி, சொல்லிக் கொடுங்க" என்று ஆறுமுகம் தம் தேவையின் நிர்ப்பந்தத்தால் பேசினார். அப்போது அவர் மனக்கண்ணில் தன் வாழ்நாளை எண்ணிக் கொண்டிருக்கும் அவரது ஒரே துண்டும் சோகத்துடன் தன்னை முழுமையாக விரித்துக் காண்பித்தது.

"மூணு அம்பதுன்னு எடுத்துக்குங்க.." கடைக்காரர் இவர்களின் அடையாளம் புரிந்து சொன்னார்.

"ரெண்டே காலுக்குன்னாக் குடுங்க"

"இல்லீங்க, வராதுங்க"

"சரி, முடிவா ரெண்டரைன்னு வச்சுக்குங்க"

"இல்லீங்க. அதான் அப்பவே சொல்லிட்டேனே. அதுக்கும் கீழே போனா அடக்கம் கூட வராது"

"இங்க பாருங்க. நாங்க நெய்யிற மாதிரி இது அழுத்தமும் இல்ல; முழமும் கட்டை!"

"உங்களுக்குத்தான் மூணரை ரூபா. மத்தவங்களுக்குன்னா நாலு ரூபாய்க்கு அஞ்சு பைசாக் கூட கொறைக்க மாட்டேன்..."

"சரிங்க, அப்ப நாங்க வர்றோம்..."

ஆறுமுகமும், காளிமுத்துவும் அந்தக் கடையிலிருந்து வெளியேறி, அந்தப் பஜாரில் இருந்த அத்தனை ஜவுளிக் கடைகளிலும் அவர்கள் ஏறி இறங்கியதுதான் மிச்சம்.

ஒரு நிமிடம்

# காலவெள்ளமும், காட்டாற்று வெள்ளமும் யாருக்காகவும் நிற்பதில்லை... கையிலுள்ள பணத்தைப் போல!

இன்று ரூ. 372.40க்கு வாங்கும் காயத்ரி ரொக்கப்பத்திரத்தின் மதிப்பு
இன்னும் பத்தே ஆண்டுகளில் ரூபாய் 1000! இன்றைய முதலீட்டில் உங்கள் திறமை — அதனால்
ஓய்வு காலத்தில் பெறும் பயனோ முழுமை!

**கரூர் வைஸ்யா பாங்கின் காயத்ரி ரொக்கப் பத்திரங்கள்**

- 70 ஆண்டுகளுக்கு மேலாகப் பணிபுரிந்து வருகிறது.
- ஒவ்வொருவர் தேவைக்கும் ஏற்ற பல திட்டங்கள்.
- வாடிக்கையாளர்களுக்குத் தனிப்பட்ட கவனிப்பு.

உங்கள் கனவுகளை நனவாக்கும் பாங்க்
கரூர் வைஸ்யா பாங்க்.



**கரூர் வைஸ்யா பாங்க் லிட்**

பதிவுக் மத்திய அலுவலகம் :
தபால்பெட்டி எண் : 21 ஈரோடு சாலை கரூர் - 639 002.

அன்னியச் செலாவணியில் வர்த்தகம் புரிய
அங்கீகாரம் பெற்றவர்கள்

சேர்மன் :
கே.என்.புஜங்க ராவ்

Anugrah – 161/87 Tam.

**சேமிப்பு மாத விழா – நவம்பர் 1 முதல் 30 வரை**




"நம்ம கேஷியர் இரு மொழித் திட்டத்தைத் தீவிரமா ஆதரிப்பவர்!"

"எதை வைச்சுச் சொல்றே?"

"எப்பவும் பணத்தைத் தமிழில் ஒரு வாட்டியும், இங்கிலீஷில் ஒரு வாட்டியும் எண்ணித் தருகிறாரே!"

— கல்பாக்கம் ராஜு.

அவர்களுக்கு எங்கும் ஏமாற்றமே!

அதனால் பெருத்த சலிப்புடனும், வெறுப்புடனும் ஆறுமுகம் சொன்னார், "என்னப்பா இது! நம்ம கிட்டயே காது குத்தறாங்க. ரெண்டு ரூவா சீசன் துண்ட இப்பிடி கூசாம நாலு ரூபாய்க்கு விக்கிறாங்களே. நாம இப்பிடி இடுப்பொடிய, நெசவு செஞ்சதுதான் மிச்சம். நம்ம ரெண்டு மணி நேரக் கூலிய இவங்க கூசாம இரண்டு நிமிசத்தில சம்பாதிச்சுருவாங்கப்பா!"

"யாவாரம்னு அப்பிடித்தாம்ப்பா. பின்னை உன்னையும் என்னையும் மாதிரியா இப்பிடி லோ லோன்னு அலையுவாங்க"— காளிமுத்து சமாதானம் சொன்னார். பின்பு அவரே தொடர்ந்தார், "அப்ப துண்டு ஒண்ணும் எடுக்கலையாக்கும்?"

"ஆமா, இந்த வெலைக்கு வாங்கணும்னு எனக்கு இப்ப அவசியம் பாரு!"

"சரி, அப்ப நான் போயி எதுனாச்சும் ஓட்டல்ல சாப்புட்டு வர்றேன்"

ஆறுமுகமும், காளிமுத்துவும் அப்படியே அவ்விடத்திலிருந்து பிரிந்தார்கள்.

சத்திரத்திற்குள் நுழைந்த ஆறுமுகம், அங்கே தமது மனைவியையும் பிள்ளைகளையும் தேடினார். சிறிது தூரத்தில் ஒரு பெரிய பெண்கள் கும்பலுக்குள் தம் மனைவியும் உட்கார்ந்திருக்கக் கண்டு அங்கு போனார்.

அங்கே அவரது மனைவி, மிகவும் வியப்புடன் பக்கத்திலிருந்த ஒரு பெண் காட்டிக் கொண்டிருந்த சட்டை பாவாடைகளை ரசித்துப் பார்த்துக் கொண்டிருந்தாள். அவற்றை அப்பெண்ணிடமிருந்து தானும் வாங்கிப் பார்த்து, அதன் மடிப்புக் கலையாமல் அவற்றை ஆச்சரியத்துடன் உற்றுப் பார்த்தாள்.

அதைப் பார்த்து விட்ட ஆறுமுகம் மிகவும் அருகில் வந்து குரல் கொடுத்தார்...

"ஏத்தா பழனியம்மா, நான் உன்னையக் காணும எங்கெல்லாம் சுத்திச் சுத்திப் பாக்கிறது!"

உடனே அவளும் சட்டென தான் பிடித்திருந்த துணிகளையெல்லாம் உரியவரிடம் சேர்த்து விட்டு, இவரை நோக்கி வந்தாள்.

"அங்க என்னத்தப் பாத்துக்கிட்டு இருந்த?" ஆறுமுகம் சற்று வெடுக்கெனக் கோபமாய்க் கேட்டார்.

"நம்ம லச்சுமணன் வீட்டுக்காரி தம் மக்களுக்கு மொட்டை போட்டதும் உடுத்தறதுக்கு வாங்குன புதுச் சட்டை, பாவாடையைக் காம்பிச்சா. அதான் பாத்துக்கிட்டு இருந்தேன்."

அவுகளுக்கு என்னத்தா! பெரிய கம்பெனியே ஓடுது! நம்மளை மாதிரி உள்ளவங்க, அவங்ககிட்ட கூலியாளாத்தானே இருக்கோம்!"

அவுக மகனுக்கு புதுச்சட்டையும், டவுசரும்... இல்லே, அது முழுக்கால் சட்டை... அதுக்கும் சேத்து எரநூத்தி அம்பது ரூபா ஆயிப் போச்சாம்! அந்தப் பொம்பளப் பிள்ளைக்கு நானூறு ரூபாய்ல பட்டுப் பாவாடையும் சட்டையும் எடுத்திருக்காக! நானும் அதப் பாத்தேன். தங்கமாட்டம் சொலிச்சுக் கிடந்தது!"

அந்தப் புதுத் துணிகள் கண்ணுக்குள் நிறைந்து கிடக்க, அவற்றைத் தொட்டு விட்ட சந்தோஷத்துடன் அவர் மனைவி பெருமையாகப் பேசினாள். மேலும் தொடர்ந்தாள்.

"அவுங்களுக்கு மொட்டை போட்டுக் குளிச்ச முடிஞ்ச உடனே, தல துவட்டறதுக்கு ஒரு டர்க்கி டவுலு வாங்குனாங்களாம். அதையும் காமிச்சா... அது மட்டும் அம்பது ரூபாயாம்! நீ இப்ப உடுத்தி இருக்குற உன் வேட்டி நீளம் இருக்கும்!"

அவளின் பேச்சால் ஆத்திரமுற்ற ஆறுமுகம், "அதுக்கு என்னைய என்னத்தா செய்யச் சொல்ற?" என்று சினந்து கூறினார்.

அவரது காரணமற்ற கோபத்தால் அவளுக்கும் கோபம் வர, அவளும் வெடுக்கெனக் கோபமாய்க் கேட்டாள்.

"ஒரு துண்டு வாங்கப் போனவருக்கு இவ்வளவு நேரமா?"

"ஒரு சீசன் துண்டுக்கு ஆனை வெலை, குதிரை வெலை சொல்றான்த்தா. நம்மளே வருசக் கணக்காக அதையே நெசவு. அதுலேயே உருண்டு பொறண்டவங்க. நம்மகிட்டயே கொள்ளை லாபம் அடிக்கிறான் போ! போன பாவுல மிச்சத் துண்டு இருக்குன்னு முந்தா நேத்துத்தான் சங்கரனுக்கு ரெண்டு ரூபாய்னு வித்தோம். அதப் போயி, நாலு ரூபாங்குறான். நம்மகிட்ட நடக்குமா? அதான், அத நீயே வச்சுக்கன்னு வந்துட்டேன்."

"அப்ப நாளைக்கு மொட்ட போட்டதும் தலை துவட்ட என்னத்த வச்சுருக்க?"

"இப்ப நான் உடுத்தி இருக்குற என் வேட்டியத்தான் வச்சுக்கணும். வேற வழி?"

இதைச் சொல்லி விட்டு, அவளது பதிலுக்குக் கூட காத்திராமல் ஆறுமுகம் அவ்விடத்திலிருந்து வேகமாய் நகர்ந்தார்.

அய்யய்யோ! இவரு துண்டு வாங்கலையா! அங்க அந்தச் சட்டையைப் பாத்துட்டு அடம் பண்ணுன எம்மவனை, அய்யா உனக்குப் புதுத் துண்டு ஒண்ணு வாங்கியாறப் போயி இருக்காருடான்னு இப்பத்தான அவன அடக்குனேன். இவரு ஒண்ணும் வாங்கலைன்னு தெரிஞ்சா, அது என்ன கூத்து பண்ணப் போவுதோ, தெரியலையே!.. ஏ...லே... முருகா... மனத்திற்குள்ளாகவே கலங்க ஆரம்பித்தாள் அவள்.

# தூங்க நிழல் வேண்டும்

## 17

ஜயசீலன் சரேலென்று சற்றுப் பின்னுக்கு நகர்ந்து தன்னை மறைத்துக் கொண்டான்.

குமாஸ்தா பழைய ஃபைல்களில் குனிந்திருந்தார்.

நான் பிறகு வருகிறேன் என்று சொன்னால் நிச்சயமாக அவருக்குக் கோபம் வரும். பதிவு அலுவலகத்திலிருந்து வெளியேறி அவனுடைய இருப்பிடம் தீர்மானிக்கப்படும் வரை அந்த ஆள், வெளியில் அந்த ஆலமரத்தடியில்தான் அடுத்த ஒரு மணி நேரத்துக்கு உட்கார்ந்திருப்பான். அவனுக்குக் கழுகுக் கண்கள். ஜயசீலன் வெளியே வரும்போது அவன் பார்வையிலிருந்து தப்ப முடியாது.

அவனுடைய மார்பு வெகு வேகமாக அடித்துக் கொண்டது. தன் இருக்கையிலிருந்து பார்த்தபோது, 'சுரேஷ்' என்று பொய்ப் பெயர் சொன்ன அந்த மனிதன், தனது நிதான நடையுடன் வெளியே செல்வது தெரிந்தது.

ஜயசீலனுக்கு உடல் முழுவதும் குளிர் படர்ந்தது.

இந்த நடைதான், பூனை போன்ற இந்தச் சப்தமில்லாத நடைதான் அவனது கவசம்.

கடவுளே இந்த முகாமுக்கு இவனும் எப்படி, ஏன் வந்து சேர்ந்தான்? செய்த அக்கிரமங்கள் எல்லாம் போதும் என்று அலுத்து வந்திருக்கிறானா? அப்படியெல்லாம் அலுப்பு ஏற்படும் பிரகிருதி இவன் இல்லை. அலுப்பு ஏற்படவும் ஒரு மெல்லிய உணர்வு வேண்டும். புதிய பலம் சேர்க்க வந்திருக்கலாம், அல்லது யாரையாவது தேடிக் கொண்டு வந்திருக்கலாம்.

ஜயசீலனுக்கு இப்பொழுது வியர்த்தது.

"செல்வா, செல்வநாயகி, செல்வராஜ், ஸில்வியா... இந்த இரண்டு ஃபைல்களிலேயும் இல்லையப்பா, நீ கேட்ட ஆள்," என்றார் குமாஸ்தா.

"அடுத்த ஃபைல்களைப் பார்க்க இப்ப நேரமில்லே."

"சரி ஐயா, நாளைக்கு மறுபடியும் வர்றேன். உங்களுக்குத்தான் பாவம், சிரமம்."

"சிரமம்தான். என்ன செய்யறது? தலைக்கு மேலே வேலை இருக்கு தினமும். இன்னிக்கு மறுபடி இரண்டு பஸ்களில் வந்து இறங்கியிருக்காங்க."

"எல்லாரையும் இந்த முகாம்லேயா வைக்கப் போறீங்க?"

"இங்கே எங்கேயிருக்கு இடம்? வேறே முகாமுக்குச் சாயங்காலத்துக்குள்ளே அனுப்பிடுவோம். ஆனா வந்ததும் விவரங்களைப் பதிவு செய்யணும். ஆயுதம் இருக்கான்னு சோதனை செய்யணும். சாப்பாடு போடணும். எல்லாத்துக்கும் தனித்தனி ஆள் இருந்தாலும் வேலைதானே?"

"ஓமய்யா."

ஜயசீலன் ஜன்னல் வழியே பார்த்தான். ஆலமரத்தடியில் அமர்ந்திருந்தவர்கள் எழுந்து கும்பலாக இடப்பக்கம் சாப்பாட்டுக் கூடம் இருந்த பாதையில் நடக்க ஆரம்பித்தார்கள்.

அவர்கள் சாப்பாட்டுக் கூடத்திலிருந்து வெளியே வருவதற்குள் வீட்டிற்குப் போய் விட வேண்டும். இன்று முழுவதும் வெளியே தலை காட்டக் கூடாது.

வீடு. அதாவது புனிதாவின் வீடு.

நேற்றைய சம்பவம் நினைவுக்கு வந்து சங்கடமேற்பட்டது. இப்போதைக்குப் புனிதாவின் வீடுதான் புகலிடம். இவள் இடம் கொடுத்திருக்காவிட்டால் அவனும் வேறு முகாமுக்குப் போக நேர்ந்திருக்கும். அதே முகாமுக்கு அவன் — 'சுரேஷ்' என்று சொல்லிக் கொள்ளும் சுகுமாரன் வந்திருப்பான். அவனைக் கண்டதும் அவனிடம் எப்படிப்பட்ட எதிர் விளைவுகள் ஏற்பட்டிருக்கும்?

'ஜயசீலனுடைய இரத்தத்தைக் குடிக்கிற வரை எனக்குச் சமாதானமில்லை' என்று சூளுரைத்தவன்.

இதுவரை அவனிடமிருந்தும் மற்றவர்களிடமிருந்தும் தப்பித்தது பெரிய ஆச்சரியம். அவனிடமிருந்து தப்பிக்க எத்தனை காலம் வவுனியாவிலும் முல்லைத் தீவிலும் மட்டக்களப்பிலும் மாறு வேஷத்தில் திரிய வேண்டியிருந்தது! சுகுமாரன் திரிகோணமலைக்குச் சென்று விட்டதாகத் தகவல் கிடைத்த பிறகே, அவன் யாழ்ப்பாணத்துக்குத் திரும்பினான். இனி இவர்கள் சகவாசமே வேண்டாம். ஸில்வியாவுடன் நாட்டை விட்டு எங்கேயாவது போய்ப் பிழைத்துக் கொள்ளலாம் என்று நினைத்தபோது ஸில்வியா காணாமற் போனாள்.

வேக வேகமாகப் புனிதாவின் வீட்டை நோக்கி நடக்கையில், "இதுக்கெல்லாம் என்ன அர்த்தம்?" என்று தனக்குள் சொல்லிக் கொண்டான்.

'நான் ஏன் உயிர் பிழைச்சிருக்கேன்? இந்த எமகாதகர்களிடமிருந்து எந்த அதிர்ஷ்டத்தில் தப்பினேன்? ஸில்வியாவோடு நாம் சேர்ந்து வாழறதுதான் கடவுளுடைய சித்தம்

வாஸந்தி

என்டு நினைக்கக் கொள்ள, சீலியாவை ஏன் ஆமி கொண்டுட்டுப் போனது?' ஆனால் இப்பவும் சுகுமாரனைக் கண்டதும் நாடி நரம் பெல்லாம் நடுங்குகிறது. 'இந்த உசிரைக் காப்பாத்த ஒவ்வொரு அணுவும் பறக்கிறது. ஓ. இவன் கையினால் நிச்சயம் சாகக் கூடாது. அவனுடைய சகாக்கள் யாராவது கூட வந்திருக்கலாம். அவர்கள் பார்வையில் படுவது கூட ஆபத்து.'

புனிதாவின் வீடு திறந்திருந்தது. அவன் நுழைந்த வேகத்தில் கதவைச் சாத்தினான். அடுப்பில் ஏதோ வேலையாயிருந்த புனிதா திடுக்கிட்டு அவனைப் பார்த்தாள்: மூச்சிரைத்தது அவனுக்கு. பானையிலிருந்த நீரை மொண்டு குடித்துக் கைக்குட்டையால் முகத்தை அழுத்தித் துடைத்தபடி தரையில் அமர்ந்தான். புனிதா அருகில் வந்து நின்றாள்.

கொல்லைக் கதவு திறந்திருந்தது.

''அந்த வாசலையும் மூடுங்கோ புனிதா'' என்றான் அவன் இறங்கிய குரலில்.

அவள் மௌனமாக அதை மூடிவிட்டு அவனருகில் வந்தமர்ந்தாள்.

''என்ன விஷயம் சீலன்? சாவைக் கண்டு பயந்த மாதிரி ஓடி வந்திருக்கீர்? இங்கென்ன பயம்?''

இவளுக்குச் சூட்சுமம் அதிகம்தான் என்று அவன் நினைத்துக் கொண்டான்.

''ஒண்டுமில்லே'' என்று அவன் தலையை முழங்கால்களுக்குள் கவிழ்த்துக் கொண்டான்.

என்னவென்று சொல்வது இவளிடம்? 'என் எதிரியைப் பார்த்தேன்' என்று சொன்னால் சீச்சீ அதற்காகப் பேடியைப் போல் ஓடி வந்தாயா என்று சிரிக்க மாட்டாளா?

யாரிடமும் சொல்லி நமக்கு ஒன்றும் ஆகப் போவதில்லை. முக்கியமாக இவளிடம்.

அவன் தலையே நிமிராமல் இருந்ததால் அவள்தன் சமையல்வேலையை மௌனமாகத் தொடர்ந்தாள்.

முழங்கால்களுக்குள் கவிழ்ந்த இருட்டின் தனிமையில் அவன் நின்றான்.

எதிரில் தலைவன் கருணாகரன் நாற்காலியில் அமர்ந்திருந்தான். பக்கத்தில் விறைப்பாக நின்றிருந்தான் சுகுமாரன்.

''எம்ம இயக்கத்திலே சேர வந்திரா?'' என்றான் சுகுமாரன்.

''ஓமய்யா'' என்றான் அவன் கருணாகரனைப் பார்த்து.

''இதுக்கு முன் ஏதாவது இயக்கத்திலே இருந்ததுண்டா?''

''இல்லே.''

''இப்ப சேர என்ன காரணம்?''

அவன் தலையைக் குனிந்து கொண்டான். சுகுமாரன் குனிந்து கருணாகரனின் செவியில் ஏதோ சொன்னான்.

''இயக்கத்திலே சேரணும் எண்டா கனக் கட்டுப்பாடு தேவை. ரகசியம் எதுவும் வெளியிலே போகக் கூடாது. தலைவனுடைய கட்டளைக்கு மறுப்போ எதிர்ப்போ தெரிவிக்கக் கூடாது. பெண்கள் சகவாசம் சிநேகம் கூடாது. உயிர்த் தியாகம் செய்யத் தயாராயிருக்கணும். சிங்களவன் நமக்கு எதிரி. அவனைப் பழிக்குப் பழி வாங்கறதுதான் நம் உயிர் மூச்சு. இயக்கத்துக்குள் இருக்கிற துரோகிகளுக்குக் கடுமையான தண்டனை உண்டு. இதெல்லாம் சம்மதம் எண்டா வாருங்கோ.''

''தயாராயிருக்கேன்.''

முந்திய இரவு தேவநேசனின் இரத்த விளாரியான உடலைப் பார்த்து ஸ்தம்பித்திருந்த புலன்கள், இன்னும் ஸ்தம்பித்திருந்தன. அந்த விநாடியில் ஏற்பட்டிருந்த தீர்மானம் இப்பொழுது இவர்கள் முன்னிலையில் உறுதிப்பட்டது.

பழிக்குப் பழி!

இதில் எந்த அரசியல் கலப்பும் இல்லை. என் தந்தையையும் அண்ணனையும் பலி வாங்கினவன் என் எதிரி. அதற்காக என்ன சாகசங்கள் செய்தாலும் தவறில்லை.

ஒரு மாதம் ஆயுதப் பயிற்சி முடிந்ததும் ''இனி நீ ஃபீல்டுக்குப் போகணும்'' என்றனர்.

''சரி.''



"இண்டைக்கு வங்கியைக் கொள்ளையடிக்கப் போறோம்."
"சரி."
கொள்ளையா அது? துப்பாக்கி முனையில் தானகச் சரளமாக வந்து விழுந்த புதையல் அது. இப்படிக் கிடைத்த புதையல்கள் ஏராளம். மந்திரக்கோலால் தட்டியது போல் அவையெல்லாம் ஆயுதமாக மாறும் போது எல்லாருடைய மார்பின் சுற்றளவும் விரிந்து போகும்.
"காங்கேசன் துறை வீதியில் இண்டைக்கு இரண்டு ஆமி லாரி படையோடு போகும். கண்ணி வெடி வெச்சு நிர்மூலமாக்கணும்."
"சரி."
வெடி வெடித்து முப்பது நாற்பது சிங்கள உடல்கள் சிதறி விழும்போது, சொர்க்கத்தில் தேவநேசனும் அப்பாவும் நன்றி சொல்வது போல் மனசு பூரிக்கும்.
காவல் நிலையம், தபால் நிலையம், ரயில் நிலையம் எல்லாம் நிர்மூலமான போது உலகத்தின் உச்சத்துக்கு நெஞ்சு உயர்ந்தது.
இந்த மாயையிலிருந்து விலகி அவன் யதார்த்தத்துக்கு அதிர்ந்து இறங்க நேர்ந்தது அவனுடைய துரதிர்ஷ்டம்.
படபடவென்று கதவு தட்டப்பட்டது.



அவன் தூக்கி வாரிப் போட்டு நிமிர்ந்தான். பீதியுடன் புனிதாவைப் பார்த்து அலங்க மலங்க விழித்தான். நான் சாக விரும்பல்லே. இன்னும் ஒரு வேலை மிச்சமிருக்கு என்பது போல்.
புனிதா அவனது தோளைச் சமாதானமாகப் பற்றினுள்.
"குழந்தைகள் சாப்பாட்டுக்கு வந்திருக்கார்கள்" என்முள் மிருதுவாக.
அவள் கதவைத் திறந்ததும் ஜோஸப் பின்னல் வர, திமுதிமுவென்று குழந்தைகள் உள்ளே வந்தார்கள்.
"ஏன் கதவு மூடியிருக்கு?"
ஜோஸப்பின் குரலிலிருந்த சந்தேகத்தைக் கண்டு அவனுக்குக் கூச்சமேற்பட்டது.
"கதைக்கறேன். நீ மறுபடியும் கதவைச் சாத்து."
புனிதா தானே கதவைச் சாத்திவிட்டுச் சாப்பாடு பரிமாற ஆரம்பித்தாள்.
"ஏன் சீலன் அண்ணு?"
"இண்டைக்கு வந்து இறங்கியிருக்கிற அகதிகளிலே ஒருத்தன் இருக்கான். அவன் என்னை விரோதியா நினைக்கிறவன். அவனுக்கு நான் இங்கே இருக்கிறது தெரியக் கூடாது. என்னைப் பற்றி உன்னை யாராவது விவரம் கேட்டால் ஒண்டும் தெரியாதுன்னு கதைக்கணும்."
"சரி, ஆனு நீர் கவலைப்பட வேண்டாம். அவங்களையெல்லாம் வேற முகாமுக்கு அனுப்பறாங்களாம். பஸ் நிக்கிறது."
"பஸ் கிளம்பற வரை கதவு மூடியிருக்கும். சரிதானே?" என்று புனிதா புன்னகை புரிந்தாள். தட்டை ஜயசீலனின் முன் நகர்த்தி, "சாப்பிடுங்கோ" என்முள்.
அவன் மறுப்புச் சொல்லாமல் சாப்பிட ஆரம்பித்தான்.
மனத்துக்குள் சமாதானமேற்படவில்லை. சுகுமாரன் ஏதோ காரணத்துக்காகத்தான் வந்திருக்க வேண்டும். அத்தனை சுலபமாக அவனை அகற்றிவிட முடியாது. குழந்தைகள் எப்பொழுது பள்ளிக்குத் திரும்பச் சென்முர்கள் என்று அவனுக்குத் தெரியாது.
புனிதா கதவைச் சாத்தியிருந்தாள். பாயை விரித்து ஓர் ஓரமாய்ப் படுத்திருந்தாள். அவனை அவள் தூண்டித் துருவி ஒன்றுமே கேட்காதது ஆச்சரியமாக இருந்தது. நேற்று இரவு வரை அவனிடம் சளசளவென்று பேசிக் கொண்டிருந்தவள் மௌனமாக இருந்தது அவனுக்கு இதமாக இருந்தது. இரவு சரியான தூக்கமில்லாவிட்டாலும் அவனுல் படுக்க முடியவில்லை. உடம்பு விறைத்து அமர்ந்தது. மனசு முன்னும் பின்னும் ஊஞ்சலாடிற்று.

"இண்டைக்கு நல்ல வேட்டை" என்முன் சுகுமாரன். "கும்பலுடைய பத்துப் பொடியன்களை மட்டக்களப்பிலேர்ந்து பிடிச்சு இங்கே கொண்டு வந்திருக்கோம்."
அவனுக்குத் 'திக்'கென்றிருந்தது. இவர்கள் இயக்கத்துக்காரன் ஒருத்தனை மட்டக்களப்பில் அந்தக் கும்பல் கட்டுக் கொன்றிருந்தது.



ஒருவர்: "தமிழக அமைச்சர் தப்பினார் என்று பத்திரிகை போஸ்டரில் போட்டிருக்கே, எதுவும் ஆக்ஸிடென்டா....?

மற்றொருவர்: அதெல்லாம் ஒண்ணுமில்லே; பிரதமர் மந்திரி சபையை மாற்றி அமைச்சிருக்காரில்லே அதைத்தான் அப்படி போட்டிருக்காங்க'

— கடுவை கோபால்சாமி.

''நம்ம இயக்கத்திலே சேர்க்கவா?'' என்றான் அவன் ஜாக்கிரதையாக. சுகுமாரன் அட்டகாசமாய்ச் சிரித்தான்.

''வந்து பாரேன்!''

பார்க்கமுடியவில்லை. பொடியன்களுக்குப் பதினைந்து வயதுக்குள்தான் இருக்கும். குளித்து இடுப்பில் துண்டுடன் வந்தவர்களை வரிசையாக உட்கார்த்தி பெட்ரோல் விட்டு எரியும் டயர்களை மாலையாகக் கழுத்தில் போட்டு... அவர்களது ஓலங்கள் இப்பவும் சில நாட்களில் தூக்கத்தில் கேட்கின்றன.

இறந்தது மட்டக்களப்புக் கீழ் ஜாதிப் பையன்கள் ஆனதால் யாழ்ப்பாணப் பெற்றோர்கள் வாயே திறக்கவில்லை.

''சிங்களவன்தான் நம்ம எதிரி. இந்தப் பொடியன்களையெல்லாம் ஏன் கொல்லணும்?''

''இதப் பார், இந்தக் கேள்வியை இண்டைக்கோடு நிறுத்து.''

நிறுத்தாவிட்டால் என்ன நடக்கும் என்று தெரியும். நாளைக்குக் களத்துக்குப் போ என்று அனுப்புவார்கள். சண்டை நடக்கும் போது இவன்கள் பின்னாலிருந்து சுட்டு விடுவார்கள். இரண்டு நாட்கள் கழித்து 'இனப் போராட்டத்தில் வீர மரணமடைந்த தியாகி' என்றவார்த்தைகளோடு அவனுடையபுகைப் படம் சுவரொட்டிகளில் இருக்கும். இல்லாவிட்டால் தூங்கும்போது ஓசைப் படாமல் மரணம் வரும். கேள்வி கேட்கக் கூடாது. சுயமாகச் சிந்திக்கக் கூடாது. தலைவனை விடத் திறமை உள்ளவனாயிருக்கக் கூடாது...

அப்பாவின் இரத்தம் அவனுள் ஓடியதால் கலாசார அதிர்ச்சி ஏற்பட்டது. போலீஸ் வந்து சென்ற அன்று சுவரில் சாய்ந்து அப்பா விசித்து விசித்து அழுததற்கான காரணம் இப்பொழுது புரிந்தது. ஒவ்வொரு முறை அப்பாவிச் சிங்களவரைக் கொல்ல நேரும் போதும் அவனது கால்களைப் பிடித்துக் கொண்டு அழுத குலரத்னாவின் நினைவு வரும். தலைவனின் பெயரைச் சொல்லிக் கொண்டு சுகுமாரன் செய்த அநியாயங்களுக்கு அளவேயில்லை. ஒரு விஷயம் புரியவேயில்லை. சிங்களவன் நமக்கு எதிரியானால், எதற்கு இவன் தமிழரையே கொள்ளையடிக்கிறான், கொல்கிறான், கற்பழிக்கிறான்?'

ஒருநாள் சுகுமாரன் அவனைக் கூப்பிட்டனுப்பினான்.

''எமக்குச் சேதி வந்திருக்கு. உமக்கு ஒரு கள்ளக்காதலி இருக்காளாம். அவளைப் பார்க்க மாதத்துக்கு ஒரு முறை போறதுண்டா?''

அவன் பதில் சொல்லாமல் தலை குனிந்தான்.

''இயக்கக் கட்டுப்பாடு நினைவிருக்கட்டும். காதல், கல்யாணம் என்கிற நினைப்புக் கூடாது.''

உன் செயல் எல்லாம் எந்தக் கட்டுப்பாட்டில் சேர்ந்தது? என்று கேட்க வேண்டும் போல் இருந்தது. அவன் பேசாமல் இருந்தான்.

''பெண் வேணுமெண்டா எங்கிட்டக் கேளு. இல்லே உன் காதலியை ரகசியமா நீ மட்டும் அனுபவிக்காதே!''

அவனுக்குச் சுரீரென்று ஆத்திரம் தலைக்கு ஏறிற்று. தன்னைக் கட்டுப்படுத்திக் கொள்ள முடியாமல் அவன் மேல் பாய்ந்து நடந்த கைகலப்பில் குண்டு பட்டு இருவருக்கும் காயமேற்பட்டது. சுகுமாரனுக்கு அதிகமாகக் காயம் ஏற்பட்டு.

''அடேய், உன் இரத்தத்தை......'' என்று அவன் கத்த ஆரம்பிக்கும்போது ஜயசீலன் உயிரைக் கையில் பிடித்துக் கொண்டு ஓடினான்.

**யா**ரோ தோளைத் தொட்டார்கள். அவன் நிமிர்ந்தான்.

''யார் அந்த ஆள், ஜயசீலன்?'' என்றாள் புனிதா.

''எண்ட விரோதின்னு கதைச்சேன் இல்லே?'' என்றான் அவன் மெல்ல.

''அவண்ட பெயர் என்ன?''

''உமக்குத் தெரிஞ்சு என்ன லாபம்?''

''சும்மாத்தான். நான் யாரண்டைக் கதைக்கப் போறேன்?''

''சுகுமாரன்.''

அவள் அவனைக் கூர்ந்து பார்த்தாள். ''சுகுமாரனா? இப்ப எனக்கு ஒரு விஷயம் நினைவுக்கு வருது. சுகுமாரன் என்கிற ஆள் சீலியாவைக் கடத்திட்டுப் போயிருக்கலாம் எண்டு யாரோ சொன்னதாக நினைவு.''

அவன் அதிர்ந்து அவளைப் பார்த்தான். பிறகு சரேலென்று எழுந்து கதவைத் திறந்து கொண்டு தலைதெறிக்க ஓடினான். அவன் மூச்சிரைக்க மார்பு படபடக்கப் போய்ச் சேருவதற்குள் புதிய அகதிகளை ஏற்றிக் கொண்ட பஸ் கிளம்பிவிட்டிருந்தது.

(தொடரும்)

**அ**ஸ்தமனத்திற்கு அவசரப்படும் சூரியனுக்குப் பயந்து, நாங்கள் சென்ற கார் அந்த மலைப்பாதையில் விரைந்தது. ஊட்டியிலிருந்து பதின்மூன்று கி.மீ. தொலைவில் நாங்கள் போக வேண்டிய நஞ்சநாடு.

ஒருவழியாக ஐந்தரை மணியளவில் நாங்கள் நஞ்சநாடை அடைந்த போது, எதிரே அந்த மனிதர் காரைக் கண்டதும் நெருங்கி வந்தார்.

# மேய இடமில்லை; மனுஷன் விடவில்லை!


எஸ். கே. ஜோகி

''கல்கி?'' என்றார்.

''ஆம். திரு. எஸ்.கே. ஜோகியின் வீடு?''

''வெல்கம்'' என்று சிரித்தார். கோட் சூட், ஷூ சகிதம் புன்னகை வீசி வரவேற்றார். ''நான் தான் ஜோகி. வீடு அதோ அங்கே இருக்கிறது'' என்று உயரத்தைக் காட்டினார். உள்ளங்கைகளை முதுகுப்புறம் சேர்த்துக் கொண்டு, சரிவைச் சமாளிக்க உடம்பை சற்றே முன் தள்ளி, பழக்கப்பட்ட கரடுமுரடான மண்பாதையில் வெகு வேகமாக ஏறினார். அவரைத் தொடர்ந்த எங்களுக்கு பலூன் பலூனாக மூச்சிரைப்பு. அவருக்கு? ஊஹூம். இந்த இடத்தில் அவர் வயதைச் சொல்லி விடுவது நல்லது. ஜஸ்ட் எழுபத்திமூன்று தான்!

அவருடைய அன்பான குடும்பத்தில் உபசாரம். ஹாலில் ராஜாஜியின் பிரதான போட்டோ. ''நான் ராஜாஜியை வழிபடறவன்'' என்ற அறிமுகத்தோடு பிரச்னைக்கு வந்தார்.

''நீலகிரியிலேயே பெரிய ஊர் நஞ்சநாடு. எங்களுக்கு மெயின் தொழில் விவசாயம் தான். அது தவிர ஊர்ல நெறையக் கறவை மாடுங்க இருக்கு. அந்த வாயில்லா ஜீவன்களோட பரிதாப நிலைமையைக் கேளுங்க...''

எங்களை வெளியே அழைத்தார். மனிதர்கள் மட்டுமே நுழையக் கூடிய வேலிப் படல்கள் வழியே நடந்தோம். மறுபடியும் ஏற்றம். பாதையில் அங்கங்கே எதிரே வரும், மேய்ச்சலுக்குப் போய் விட்டுத் திரும்பும் மாடுகள். உயரமான இடத்திற்குப் போனதும், இயற்கை இறைத்திருந்த ரம்மியம் மனத்தைக் கவர்ந்து இழுத்தது.

''கிழக்கிலயும், தெற்கிலயும், விளையற நிலம். மேற்குலயும், வடக்குலயும் மட்டும் தான் மாடுங்க மேய்ச்சலுக்குப் போக முடியும். மாடு ஒண்ணுக்கு நாலு ரூபான்னு ரேட் போட்டு வருஷா வருஷம் ஃபாரஸ்ட் டிபார்ட்மெண்டுக்குக் கட்டறோம். நீலகிரியில நெறைய மரம் நடணும்னு ரூல் வந்ததும், புள்ளி விவரத்தில காட்டறதுக்காக இந்த ஏரியால புது மரங்களை நட ஆரம்பிச்சிட்டாங்க. மாடுகள் நுழைய முடியாதபடி அங்கங்கே குறுக்கில வேலி. பழக்கமான பாதைல போகிற எங்க மாடுங்க, வேலிகளைக் கண்டு மிரண்டு போய் ஓடற நிலைமை..''

''வனத்துறையோட செய்கை நியாயம் தானே? மாடுங்களால காடு அழியக் கூடாதே?''

''மாடுங்களால வனத்துறைக்கு லாபம் தான். மூத்திரமும், சாணமும் எருவாக மாறி மரங்களுக்கு உபயோகமாகும். அறுபத்தொன்பதாம் வருஷம், கிராமமே சேர்ந்து 850 ரூபா கட்டினோம். கலெக்டர் இந்த இடத்தை மேய்ச்சலுக்காக ஒதுக்கிக் கொடுத்தார். இப்பக் கூட சீஃப் கன்சர்வேட்டர் போன் போட்டு இந்த இடத்தில குறுக்கிட வேண்டாம்னு நஞ்சநாடு ஆ பீ ஸ ர் கி ட் ட சொன்னார். ஆனா அவரோட வார்த்தைக்குக் கூட மரியாதையில்லை. ஒரு பக்கம் வளர்ந்த மரங்களை அடியோடு வெட்டி, இயற்கைக் காடுங்களை அழிச்சிட்டிருக்காங்க. இன்னொரு பக்கம் கணக்குக் காட்டறதுக்காக கடனேன்னு மரங்களை நட்டு எங்க மாடுங்க வயத்தில அடிக்கறாங்க. இதென்ன அநியாயம்! நஞ்சநாட்டில, ஆறாயிரம் பேர் இருக்கோம். ஆயிரம் மாடுங்க இருக்கு. ஊட்டிக்கு பால் கொடுக்கற ஊர் எங்க ஊர். எங்க மாடுங்க மேய இடமில்லாம பண்ணிட்டா, நாங்கள்லாம் எங்கே போக முடியும்?''

பொது நலத்தில மிகுந்த அக்கறை கொண்டுள்ள இந்தப் பெரியவரின் வார்த்தைகளுக்கு வனத்துறை மதிப்புக் கொடுக்குமா?

நாங்கள் ஊரை விட்டுப் புறப்படும் போது, இருட்டும் குளிரும் கை கோத்திருந்தன.

'ம்ம்மாஹ்ஹ்...' என்று அங்கங்கே மாடுகள் குரல் கொடுத்தன. 'எங்களுக்கு வாய் தான் இல்லை. ஆனா வயிறு இருக்குங்க ஐயா.... என்று இறைஞ்சுவது போல் இருந்தன அந்தக் குரல்கள்!

# பாராட்டு விழா!

"விழாவை என்னிக்கு நடத்தப் போருங்களாம்! எப்போ நடத்தருங்க? யார் தலைமை தாங்கறது? கமிட்டி கூட்டத்திலே என்ன முடிவு பண்ணினுங்க?''

வீட்டு வாசற்படி ஏறுமுன்பே ஞான சம்பந்தத்தைக் கேள்விகள் வியூகம் கட்டி நிறுத்தின.



''விழாவை ஒரு ஞாயித்துக்கிழமையாப் பார்த்து வைச்சிட்டா நல்லாயிருக்கும். என் பாங்க் ஸ்டாப் முழுதும் வரணும்கருங்க. என் மத்த ஆபீஸ் நண்பர்களும் கலந்துக்க வசதியாயிருக்கும்!'' அப்பாவுக்குக் கிடைத்த பெருமையில் பங்கு பெறத் துடிக்கும் மகன்.

''மாமா, விழா பிரம்மாண்டமா நடக்கும், இல்லியா? ஆறடி உயர மேடை, அலங்கார விளக்கு தோரணம், டியூப்லைட், சீரியல் செட், மைக்செட், சினிமாப்பாட்டுன்னு அமர்களப்படுத்திட மாட்டாங்க! டியூப் லைட்டு வெளிச்சத்திலே உங்களை ரோஜாப்பூ மாலையும் கழுத்துமாக உட்கார வைத்துப் பெரிய மனுசங்க பாராட்டறதைப் பார்க்க, நாங்க கொடுத்து வைச்சிருக்கணும்.''

தன்னை மாலையும் கழுத்துமாகப் பார்த்த மாமனுரைப் பொது மேடையில் மாலையும் கழுத்துமாகப் பார்க்கப் பரபரக்கும் மரு



மகன்.'

"நாங்கள்லாம் எத்தனை ஆசையா காத்திட்டிருக்கோம். என்ன நடந்ததுன்னு சொல்லுங்களேன்." மனைவியின் கெ(ா)ஞ்சலில் கூட சம்பந்தத்தின் அமைதி இடறவில்லை.

"முதல்லே சூடா ஒரு காப்பி கொண்டா!" — நாற்காலியில் சாய்ந்தார்.

எல்லோர் பார்வையிலும் தனித்தனி சந்தேகங்கள்.

விழாக் கமிட்டிக் கூட்டத்துக்குப் போகும் போது இருந்த கலகலப்பு வடிந்து போயிருக்கிறதே, ஏன்?

"ஏம்ப்பா, சரவணன்தானே இப்ப கரஸ்பாண்டண்ட். நம்ம வீட்டையே சுத்திச் சுத்தி வந்து ஒண்ணும் கிளாஸ் முதல் பத்தாம் கிளாஸ் வரை படிச்ச பையன். பணக்காரன்கிற கர்வமேயில்லே. தம் குருநாதரை எப்படியெல்லாம் பாராட்டணும்னு யோசனை பண்ணி வைச்சிருப்பாரே!"

"விழாவுக்கு எந்த மந்திரி வர்றாங்க? தமிழ்நாடா, டெல்லியா? ரெண்டு மூணு பேரைப் பிடிக்க முயற்சி பண்ணினாத்தான் ஒருத்தராவது அகப்படுவாங்க... என்ன பண்ணப் போறாங்களாம்?"

ஞானசம்பந்தம் காப்பியை உறிஞ்சலானார்.

ஞானசம்பந்தத்திற்கு ஐம்பத்தாறு வயது. டி.எஸ்.ஆரில், முப்பத்து மூன்று வருட அனுபவங்கள் பதிவு. பிறவி எடுத்ததே குழந்தைகளுக்குப் பாடம் சொல்லிக் கொடுக்கத்தான் என்பதுபோல் பள்ளிக் கூடம், குழந்தைகளின் படிப்பு, தவிர வேறு எதிலும் பற்று வைக்காத மனம். இரண்டு தலைமுறைகளுக்குப் பாடம் நடத்திய பெருமை. தெருவில் நடந்தால் கும்பிடாத கைகள் இல்லை.

இவருடைய திறமை கண்டுபிடிக்கப்பட்டு ஜனாதிபதி பரிசு கிடைத்தது. சிறந்த ஆசிரியர் பட்டம். ஐயாயிரம் ரூபாய். தங்கப் பதக்கம்.

செய்தி கிடைத்த அன்று வீடு முழுக்க ரோஜா மாலைகள். தெரு முழுக்கச் சாக்லேட் காகிதங்கள்.

பள்ளிக்கூடமும் பாராட்டத் தயாரானது.

"சார், நீங்க கட்டாயம் கூட்டத்துக்கு வரணும். உங்க எண்ணத்தையும் சொல்லணும். அப்பத்தான் எங்களுக்கு உதவியாயிருக்கும்." வரமறுத்த வரைச் சரவணன்தான் கட்டாயப்படுத்தி அழைத்துப் போனான்.

ஞானசம்பந்தத்துக்குப் பொதுக் கூட்டம், மாலை, மரியாதை என்றாலே அலர்ஜி. "எனக்கெதுக்குப்பா இதெல்லாம்?" என்ற ரகம்.

"நம்ம பள்ளிக்கூடப் பேரை டெல்லி வரை நம்ம வாத்தியார் கொண்டு போயிருக்கார். அவரை நாம் கௌரவிக்கணும். பாண்டு வாத்தியம், நாதசுரம், மேடை, பந்தல் அலங்காரம், டியூப் லைட், சீரியல் செட், மைக்செட்டெல்லாம் வைச்சு அமர்களமா விழா எடுக்கணும்"

"இந்த மாதிரி விழாக்களுக்குப் பெருந்தலைகள் வந்தாத்தான் நல்லாயிருக்கும். நாம் மெட்ராஸ் போயி யாராச்சும் மந்திரிகள் வருவாங்களான்னு பார்த்து, ஏதாவது ஒரு மந்திரியை ஏற்பாடு பண்ணிடலாம். வாத்தியாருக்கும் மந்திரியாலே நல்லதா ரெண்டு புகழ்ச்சி கிடைக்கும். ஊருக்கும் மந்திரி வர்றாருன்னு ஒரு கௌரவம் வரும்."

"அது மட்டும் போதாது. பொது ஜனங்க நம்ம வாத்தியாருக்கு எடுக்கற விழாவைத் தெரிஞ்சுக்க போஸ்டர் அடிக்கணும். ஊர் முழுவதும் போஸ்டர் அடிச்சு ஒட்டிடணும். பிட்நோட்டீஸ் அடிச்சு வீடு வீடாகக் குடுக்கணும்."

ஒரே கைதட்டல்!

மந்திரி, போஸ்டர், பிட்நோட்டிசு என்றதும் ஆலோசனைகள் திசை தவறின.

எந்த மந்திரியைக் கூப்பிடுவது? யார் வருவார்கள்? எப்படிக் கூப்பிடுவது? வரும் மந்திரியை எப்படி வரவேற்பது? போஸ்டர் எத்தனை கலரில் எந்தெந்த அளவுகளில் அடிப்பது? எங்கெங்கு ஒட்டுவது? ஆளுக்கு ஆள் யோசனை சொல்லக் காலம் கடந்தது.

ஞானசம்பந்தத்துக்குக் கூச்சமாக இருந்தது. எழுந்து போக மனம் துடித்தாலும் கால்கள் எழவில்லை.

அவரும் முதலில் நமக்கெதற்கு இந்த விழா, வரவேற்பு கொண்டாட்டம் என்றுதான் இருந்தார். கமிட்டியின் தீர்மானமும் பேச்சும் மன உறுதியைக் கரைக்க, "இவர்கள் தரும் மரியாதையை ஏன் ஏற்றுக் கொள்ளக் கூடாது" என்ற ஆசை மெதுவாக அரும்ப ஆரம்பித்தது.

இதுவரை எதற்கும் வாயைத் திறக்காத சரவணன் பேச ஆரம்பித்த போதுதான் சூழ்நிலை இறுகியது.

"நீங்க சொல்றதெல்லாம் சரி. ஆனா ஏத்துக்க முடியாது. நம்ம வாத்தியாரைப் பத்தி நமக்கு நல்லாத் தெரியும். அவருக்கு ஆடம்பர விழா எடுக்கணும்னு நாம் அவசரப்பட்டுப் பணத்தை வீணாக்க வேண்டியதில்லை. யாரும் எந்த மந்திரியை அழைக்கவும் மெட்ராஸ் போகத் தேவையில்லை. நம்ம ஊர்லேயே ஒழுக்கத்திலே படிப்பிலே பெரிய மனுசங்க, அனுபவப்பட்டவங்க இருக்காங்க. அவங்களே தலைமை தாங்க ஏற்பாடு பண்ணுவோம். விழா ரொம்பச் சிம்பிளா அமையணும்.

"என்ன தம்பி சொல்றே? இது நம்ம பள்ளிக் கூடத்துக்குக் கிடைத்த எவ்வளவு பெரிய கௌரவம். இதைக் கூட நாம பெருமைப்படுத்திக் கொண்டாடலேன்னா நஷ்டம் நமக்குத்தான்!" — ஒருவர்.

"இன்னொண்ணும் தேவையில்லே. போஸ்டர் அடிக்க ஏகப்பட்ட செலவு ஆகும். இதுவும் தேவையற்ற செலவு. பிட்நோட்டீசு கூட வேண்டாம்.

"தம்பி நீ....'

"நான் சொன்னதை மீறிச் செய்ய ஆசைப்பட்டா உங்க இஷ்டப்படி செய்யுங்க. என்னை விட்டுடுங்க.'

'கமிட்டியே அதிர்ந்தது. சரவணனை எதிர்த்துப் பேசிக் காரியத்தைச் சாதிக்கும் சக்தி கமிட்டியில் யாருக்கும் கிடையாது.

'இன்னும் உட்கார்ந்திருந்தால் கேவலம்'

ரா. குருராசன்



* பட்டன் வகைக் காளான்கள்



* அகர்வால்

# காளான் என்னும் சத்துணவு!

சாதாரணமாக ஓர் அரசியல் கட்சி ஆட்சிக்கு வந்த பிறகு, அதில் பதவி சுகத்தை அனுபவிப்பதற்காகச் சிலர் புதிதாக வந்து சேருவார்கள். அப்படிப்பட்டவர்களை மூத்த உறுப்பினர்கள் திட்ட நேர்ந்தால், 'இவர்களெல்லாம் நேற்றுப் பெய்த மழையில் இன்று முளைத்த காளான்கள்' என்றுதான் அலட்சியமாகச் சொல்வார்கள்!

ஆனால், உண்மையில் எந்தக் காளானும் ஒரே இரவில் வளர்ந்துவிடும் அதிசயம் படைத்ததல்ல. ஒரு காளான் வளருவதற்கு ஏழிலிருந்து எட்டு வாரங்கள் பிடிக்கும்! மேலும் காளான்கள் அலட்சியப்படுத்தக் கூடிய பொருளும் அல்ல. ஏராளமான புரதச் சத்தை உள்ளடக்கியவை இந்தக் காளான்கள். முட்டைக் கோசு, உருளைக் கிழங்கு போன்றவற்றிலுள்ள புரதச் சத்தைப் போல் இரண்டு மடங்கும் தக்காளி, கேரட் போன்றவற்றிலுள்ளதைப் போல் நான்கு மடங்கும் ஆரஞ்சில் உள்ளதைப் போல் ஆறு மடங்கும் அதிகமான புரதச் சத்துக் கொண்டவை இவை! சுருக்கமாகச் சொன்னால் எந்தக் காய்கறியை விடவும் இரண்டு மடங்கு அதிகமான புரதச் சத்தும் மாமிசத்தில் உள்ளவற்றை விட அதிகமான இரும்புச் சத்தும் கொண்டவை. கூடவே ஏராளமான வைட்டமின்களையும் உள்ளடக்கியிருக்கின்றன.

குறிப்பாகக் குண்டாக இருப்பவர்கள் உடல் இளைக்க விரும்பினால், காளான்களைச் சாப்பிட்டாலே போதும்; சராசரிக்கு வந்து விடுவார்கள். குழந்தைகளின் எலும்பு, பல் வளர்ச்சிகளுக்குக் காளான்கள் பெரிதும் உதவுகின்றன. கர்ப்பிணிப் பெண்களுக்கும், இரத்த அழுத்தம், சர்க்கரை வியாதிக்காரர்களுக்கும் ஐடியல் டிஷ் இது!

பொதுவாகக்காளான்களைக்கொண்டு சூப் தயாரிக்கலாம். (நட்சத்திர ஹோட்டல்களிலும் பணக்கார வீடுகளிலும் இது பிரசித்தம்!) புலாவ் செய்யலாம்; கறியாக வறுக்கலாம்; ஆம்லெட் வார்க்கலாம்; கட்லெட் செய்யலாம்; கூர்மா பண்ணலாம்;

---

என்று நினைத்த சம்பந்தம் எழுந்தார். அடித்தளத்தில் ஆதாரமில்லாமல் எழுந்த அற்ப ஆசைகள் சரவணனது கண்டிப்பில் நொறுங்கிச் சிதற மனத்துள் ஒரு வருத்தம்.

'சரவணன் என்னுடைய மாணவன். எனக்கு விழா எடுப்பதில் அவனுக்கென்ன அவ்வளவு வருத்தம். எதற்கு இந்த எதிர்ப்பு?' புரியவில்லை.

"ஏன் இப்படி எல்லாரும் கற்பனை பண்ணிக்கிட்டு ஆளுக்கு ஆள் பேசறீங்க? நீங்க நினைக்கறபடியெல்லாம் விழா நடக்காது. கமிட்டி கூட்டத்திலே எல்லாரும் மந்திரிகளைக் கூப்பிடணும், போஸ்டர் அடிக்கணும்னு பிரமாதமாப் பேசினாங்க. ஆனால் சரவணன் மட்டும்....."

"சரவணன் என்னப்பா சொன்னார்?"

"அதெல்லாம் கூடாதுன்னு கண்டிப்பாச் சொல்லிட்டான். விழா அன்னிக்குக் கோயில்லே ஓர் அர்ச்சனை. சாயங்காலம் பள்ளிக்கூட கிரவுண்ட்லே கூட்டம், போதுமா?"

'சப்'பென்று முகங்கள் சுருங்கின.

"என்னப்பா இது, இப்படிப் பண்ணிட்டாங்க? உங்களுக்குக் கிடைச்சிருக்கறது எப்படிப்பட்ட கௌரவம்; மதிப்பு! இதை இப்படியா கொண்டாடணும்? இது உங்களைப் பாராட்டற மாதிரி தெரியலே! சே, சுத்தமோசமான உலகம். தகுதியிருக்கறவனைப் பாராட்ட மனசே வர்றதில்லே. அப்படி யாராவது பாராட்ட முன் வந்தாலும் யாராவது குறுக்கே புகுந்திடுவாங்க..."

"எல்லாம் பொறாமை. தனக்குக் கிடைக்க வேண்டிய கௌரவமும் பெருமையும் இன்னொருத்தனுக்குக் கிடைச்சா அதைப் பாராட்ட மனசில்லாம பொறாமை. வயிற்றெரிச்சல்..."

"போதும் நிறுத்துங்க. இவங்களெல்லாம் எனக்குப் பாராட்டு விழா நடத்துவாங்க, பொன்னாடை போர்த்துவாங்கன்னு நான் இத்தனை வருஷம் பாடுபட்டேன். இல்லையே. இதெல்லாம் வழியிலே வந்தது. அவங்கவங்களுக்குப் பிடிச்ச மாதிரி பாராட்ட நினைக்கிறாங்க. என்னை இப்படித்தான் பாராட்ட

ஊறுகாயும் போடலாம்! ஆனாலும் ஒரு துரதிர்ஷ்டம், நம்மில் பலர் இந்தக் காளான் என்பதே அசைவ உணவு வகையைச் சார்ந்தது என்று ஒதுக்கி வைத்திருப்பது தான். பம்பாயில் செய்யப்பட்ட ஆய்வில் இது ஓர் அசைவ உணவு வகை என்றுதான் வோட்டுப் போட்டிருக்கிறார்கள்!

உண்மையில், பூமியில் தோன்றிய மிகத் தொன்மையான தாவர வகைகளில் இந்தக் காளானும் ஒன்று. சீனா, எகிப்து, கிரேக்கம் போன்ற நாடுகளில் நாகரிகமடைவதற்கு 4,600 ஆண்டுகளுக்கு முன்பே இந்தக் காளான்களை உண்டு, ருசித்து, அதன் ருசியில் மயங்கிக் காளான்களைக் 'கடவுளின் உணவு' என்று போற்றிப் புகழ்ந்திருக்கிறார்கள். இன்றைக்குக் காளான்களைப் பயிரிடுவதென்பது மேலை நாடுகளில் ஒரு குடிசைத் தொழிலாகவே செய்யப்படுகிறது. அந்த அளவுக்கு மக்கள் விரும்பிச் சாப்பிடுகிறார்கள்.

ஆனால், இந்தியாவில் இன்னும் இது பிரபலமடையவில்லை. வடஇந்தியாவில் பிரபலமடைந்திருக்கிற அளவுக்குக் கூடத் தென்னிந்திய மக்களிடையே இன்னும் பிரபலமடையவில்லை.

காளான்கள் உடம்புக்கு நல்லதாயிற்றே என்று கருதி கண்ட கண்ட காளான்களைப் பறித்து உணவாக்கி உண்டு விடக் கூடாது. சில காளான்களில் நச்சுத்தன்மை உண்டு. எனவே உண்ணக் கூடிய காளான்களை இனமறிந்து வளர்க்கவோ, வாங்கவோ வேண்டும். காளான்களில் சுமார் நான்காயிரம் வகைகள் இருந்தாலும் மூன்றே மூன்று வகைகள்தான் உலகம்முழுவதிலும்பயிரிடப் பட்டு மக்களால் சாப்பிடப்படுகின்றன. சிப்பி வகைக் காளான்கள் (பிலுரோட்டஸ் ஆஸ்ட்ரியேட்டஸ்) வைக்கோல் வகைக் காளான்கள் (வல்வெரியோலா), பட்டன் வகைக் காளான்கள் (அகாரிகஸ் பிஸ்போரஸ்) என்பவைதான் அவை.

இவற்றில் பட்டன் வகைக் காளான்களை ஊட்டியில் உற்பத்தி செய்து கொண்டிருக்கும் 'தி புளூ மவுண்டன் ஃபுட் புராடக்ட்ஸ்' என்னும் நிறுவனத்தின் மானேஜரான அகர்வாலைச் சந்தித்த போது, "காளான்களை உற்பத்தி செய்ய வெறும் கம்போஸ்ட் உரமே போதும். அவற்றில் காளான்களுக்கான விதைகளைத் தயாரித்துப் பயிரிடுகிறோம். ஊட்டியின் வெப்பநிலை காளான்கள் வளர்வதற்குத் தோதாக இருக்கிறது. இருந்தாலும் பதினான்கிலிருந்து பதினேந்து சென்டிகிரேட் வரை வெப்பத்தைக் கட்டுப்படுத்தி, நாங்கள் அறைக்குள் வளர்க்கும் காளான்களின் உற்பத்திதான் வெளியில் வளர்ப்பதை விட அதிகமாக இருக்கிறது.

"இப்போது காளான்களின் பயன்களைப் பொது மக்கள் கொஞ்சம் கொஞ்சமாக உணர்ந்து வருவதால் தேவையும் அதிகரித்துக் கொண்டிருக்கிறது. எங்களால் தேவைக்கேற்ப உற்பத்தி செய்து தர இயலவில்லை! அதனால், பக்கத்தில் தனிப்பட்ட முறையில் குடிசைத் தொழிலாக வளர்க்க ஆர்வம் காட்டுகிறவர்களுக்கும் காளான் விதைகளைக் கொடுத்துப் பயிரிடவும் உதவி செய்யத் தயாராய் இருக்கிறோம். அரசும் உதவத் தயாராய் இருக்கிறது. இது நல்ல தொழில். நீலகிரி மாவட்டத்தில் உள்ளவர்கள் இதைப் பயன்படுத்திக் கொண்டு முன்னேறலாம். மற்ற இடங்களில் உள்ளவர்களும் வெப்ப நிலையைக் கட்டுப்படுத்தத் தயாராய் இருந்தால் அறைக்குள் வளர்க்க உதவவும் தயாராய் இருக்கிறோம். மக்களும் காளான்களின் சிறப்பை உணர்ந்து, அன்றாட உணவில் பயன்படுத்திக் கொண்டால் ஆரோக்கியத்திற்கு மிகவும் நல்லது..." என்றார் அவர்.

— பிரின்ஸ்

---

ணும்னு அவங்களைக் கட்டுப்படுத்த யாருக்கு அதிகாரம் இருக்குது? போய் அவங்கவங்க வேலையைப் பாருங்க..."

"சார்"

வாசற் கதவில் மரங்கொத்தியின் கொத்தல் போல் சத்தம்.

சரவணன்!

"சார், இன்னிக்குக் கூட்டத்திலே நான் பேசினதைக் கேட்டு உங்களுக்கு மனக்கஷ்டமாயிருக்கும். உங்களுடைய அடக்கமும், பணிவும், அன்பான மனசும் எல்லாருக்கும் தெரியும். ஊரே தண்ணீர் பஞ்சத்திலேயும் வறட்சியிலேயும் வாடறப்போ, ஆயிரக்கணக்கிலே பணம் செலவு பண்ணி, விழா நடத்தறதை நீங்க விரும்பமாட்டீங்கன்னு எனக்குத் தெரியும். அது அவங்களுக்குத் தெரியாது.

"விழாவுக்கு மெட்ராஸ் போய் மந்திரிகளை கூட்டி வரணும்னுங்க. அவங்களுக்கு உங்களைப் பத்தியும் நம்மைப் பத்தியும் என்ன சார் தெரியும்? உங்களை முன் பின் பார்க்காதவங்க எப்படி சார் மனசாரப் பாராட்ட முடியும்? அந்தப் பாராட்டை நாம எப்படி சார் ஏத்துக்க முடியும்? இது ஆதாயம் தேடற விழா இல்லே. ஆதாயம் அடைஞ்சவங்க, ஆதாயம் தந்தவருக்கு நடத்தும் நன்றி விழா. இங்கே மனசு பேசணும். உதட்டுக்கு வேலை இல்லே. அரசியல்வாதிகள் வந்தா அவங்களைச் சுற்றித்தான் கூட்டம் கூடும். உங்களுக்கு நடக்கற விழாவிலே உங்களை விட்டுட்டு அவங்களைத்தான் காக்கா பிடிக்க ஓடுவாங்க. உங்களுக்கு நடக்கற விழாவிலே நீங்களே பூஜ்யமாகி விடுவீங்க.

"போஸ்டர் அடிக்கணும்னுங்க. போஸ்டர்லே உங்க பேர் சின்னதாயிருக்கும். தலைமை தாங்க வர்ற மந்திரி பேர் பெரிசா இருக்கும். ஆளுங்கட்சி, எதிர்க்கட்சி, உள்கட்சி, கோஷ்டிகள்னு புதுசாப் பல தலைவலிங்களும் வந்து சேரும். அதனால்தான் சார் அதெல்லாம் வேண்டாம்னேன்..."

சரவணன் பேசி முடித்ததும் ஞானசம்பந்தம் மெய்சிலிர்த்துப் போனார். அவனை அப்படியே மார்போடு சேர்த்துக் கட்டிக் கொண்டார்.



* வித்தியாசமான பள்ளிக்கூடம்

# ஒரு வித்தியாசமான பள்ளிக்கூடம்



* தலைமையாசிரியர் நாராயண் தேவ்

ஹெட்மாஸ்ட்ர் அறை. மாலையும் கழுத்துமாக ஒரு தம்பதி.

"ஐயா, எங்களுக்கு இன்னிக்கு காலைல தான் கல்யாணம் ஆச்சு. ரெண்டு வருஷம் கழிச்சு கொழந்தை பொறக்கலாம். அந்த குழந்தைக்கு உங்க ஸ்கூல்லே அட்மிஷன் வேணுங்க. இப்பவே ரிஸர்வ் பண்ண வந்தோம்."

ஸாரி, இது ஜோக்கில்லே. ஊட்டியின் நடைமுறை.

ஊட்டிக்கு ரயிலைக் கொண்டு வந்த பிரிட்டிஷ் ராஜ், நிறைய ஆங்கிலம் தோய்த்த கான்வெண்ட்களையும் தூவி விட்டுப் போனது., பணக்காரர்களின் ஃபாஷன், நடுத்தர வர்க்கத்தின் எட்டாத கனவு என்று

* குழந்தைகள் பயிலும் பரதம்



வர்ணிக்கக் கூடிய இத்தகைய பள்ளிகளிலிருந்து மாறுபட்ட ஒரு பள்ளியைப் பார்க்க வேண்டும் என்று ஆசை இருக்கிறதா?

'வாருங்கள் எங்கள் **BLUE MOUNTAIN** பள்ளிக்கு' என்று எழுதியிருந்தார் செல்வி' சுசீலா குமாரவேல்.

ரேஸ் கோர்ஸை ஒட்டிய மலையேற்றம். மண் பாதை; சரிவான பாதை; மழைக் காலத்தில் நேரே மோட்சம் கொடுக்கக் கூடிய பாதை. வெகுதூரம் ஏறியதும் புளூமவுண்ட்டன் ஸ்கூல். வாசலில் ஒரு போர்டு கூட இல்லை.

பசுமையை இறைத்த இயற்கைச் சூழலில் ஓர் ஆபரணம் போல அந்தக் கட்டடம். வரவேற்பு அறையில் நம்மை வரவேற்கும் தலைமை ஆசிரியர் நாராயண்தேவ்.

"இருபத்தாறு வருடங்களுக்கு முன்னால் தொடங்கப்பட்டது இந்தப் பள்ளி. ஆரம்ப வருடத்தில் இரண்டே மாணவர்கள் தான். பியர்ஸ் (**Pearce**) எனும் ஆங்கிலேயர் இந்தியாவால், அன்னி பெசண்ட், ஜே.கிருஷ்ண மூர்த்தி ஆகியோரால் கவரப்பட்டார். ஆங்கிலக் கல்வி முறையை விடுத்து, சீர்திருத்தக் கருத்துக்களோடு இந்தப் பள்ளிக்கூடத்தை அவர் துவங்கினார். கல்வியறிவை விட ஒரு மனிதனை மனிதனாக உருவாக்குவதில் அதிக கவனம் செலுத்த வேண்டும் என்பது அவருடைய ஆசை. ஆனால் பள்ளியை ஆரம்பித்த

இரண்டு மாதங்களிலேயே அவர் காலமானார். பியர்ஸ் அறக்கட்டளை, பள்ளியைத் தொடர்ந்து வெற்றிகரமாக நடத்திவருகிறது."

"அப்படி என்ன இந்த ஸ்கூல் ஸ்பெஷல்?"

"ஜே.கே. என்ன சொன்னார்? பியர்ஸ் என்ன நினைத்தார்? ஒவ்வொரு மனிதனுடைய உள்ளறிவும் சரியானபடி தூண்டி விடப்பட வேண்டும். அதைத் தான் இந்த பள்ளி முயற்சி செய்கிறது. இங்கு மாணவர்களுக்குத் தேவையான சுதந்தரம் அளிக்கப்படுகிறது. பரீட்சைகள் நடத்தி இவன் முதல் ராங்க், இவன் இரண்டாவது என்று கம்ப்பேர் பண்ணுவதில்லை. பாஸ், பெயில் கிடையாது. எந்த வகுப்பிலும் கிளாஸ் லீடர் என்று யாருமே கிடையாது. எல்லாரும் சமம். யார் யாருக்கு எந்தெந்தத் துறையில் ஆர்வம் இருக்கிறது என்று கவனித்து அந்தத் துறையில் ஊக்கம் கொடுக்கிறோம்."

நடைமுறையில் இது சாத்தியம் ஆகுமா? உலகம் இன்றையத் தேதியில் போட்டிகளில் யார் முதல், யார் நெக்ஸ்ட் என்று தானே பார்க்கிறது? இந்தப் பள்ளியை விட்டு வெளியே போனதும் அந்த மாணவன் சரியான பயிற்சி இல்லாமல் திணறக் கூடுமே?"

"பள்ளியை விட்டு வெளியேறுமுன் மாணவர்கள் பரீட்சைகள் எழுதும் பயிற்சிகளையும் பெற்று விடுகிறார்கள்..."

**நா**ன்கு ஏக்கர் நிலப்பரப்பில் அமைந்திருக்கும் இந்தப் பள்ளியில் மாணவர்கள், ஆசிரியர்கள் இரண்டு சாராரும் பள்ளியிலேயே வசிக்கிறார்கள். முட்டை மட்டும் சேர்த்த சைவ உணவு. ஆறு வயதில் சேர்க்கப்படும் மாணவன் அல்லது மாணவி பதினாறு வயது தாண்டும் வரை இங்கே இருக்க அனுமதி உண்டு. நூறு மாணவர்களுக்கு மேல் எந்த நேரத்திலும் சேர்க்கும் எண்ணம் இல்லை.

ஸ்கூலைச் சுற்றி வந்து பார்வையிட்டோம்.

காரிடார் நோட்டீஸ் போர்டில் மாணவர்கள் இறுக்கிய கவிதைகள், கட்டுரைகள், ஓவியங்கள், ஒரு கதவைத் திறந்ததும் நீளமான ஹாலில் வெவ்வேறு நடனப் பயிற்சிகள் செய்து மகிழ்ச்சியில் துள்ளும் சுதந்திர மாணவர்கள். இன்னொன்றில் பெயிண்டிங்கில் ஈடுபட்டிருக்கும் குழந்தைகள்.

மாணவர்கள், மாணவிகள் தங்கும் அறைகளில் மாடிக் கட்டில்கள், மெத்தைகள், சுவர்களை அலங்கரிக்கும் அவர்களுடைய கைவண்ணங்கள். எங்கு திரும்பினும் ஓர் ஆரோக்கியம்; சந்தோஷம்; மனநிறைவு. ஆசிரியர்—மாணவர் என்ற பயம் இல்லை. எரிச்சல் கிடையாது.

இம்மாதிரிப் பள்ளிகள் நிறையத் தோன்றினால் மாணவர்கள் அறிவை மட்டுமின்றி ஆற்றலையும், தன்னம்பிக்கையையும் பெற்று மனிதாபிமானம் மிக்க மாமனிதர்களாக உருவாகி விடுவார்கள் என்ற நம்பிக்கை ததும்ப நாம் வெளியே வரும்போது, ஒரு கேள்வி நெஞ்சில் நிற்கிறது:

வருங்காலப் பாதையை செப்பனிட்டுக் கொண்டிருக்கும் இந்தப் பள்ளிக்கு வந்து சேர ஓர் ஒழுங்கான பாதை எப்போது அமையப் போகிறது?



"நம்ம ராமசாமிக்கு, எதுக்கு 'டாக்டர் பட்டம்' கொடுத்திருக்காங்க?"

"அமைச்சருக்கு 'டாக்டர் பட்டம்' தர 'சிபாரிசு' செஞ்சதுக்காம்!"

— ஆர். வசந்தகுமார்.



"மாப்பிள்ளை ஏன் தாடி வச்சுருக்கார்ன்னு வாய் தவறிக் கேட்டது தப்பாப் போச்சு!"

"ஏங்க?"

"வரதட்சணையோட ஒரு சேவிங் செட்டும் வாங்கித் தரும்படி சொல்லிட்டாங்க!"

— மணியன் தர்மலிங்கம்.




"என்னங்க...! கல்யாணப் பத்திரிகையில பின்புறம் 'தங்கள் நல்வரவை எதிர்பார்க்கும்' என்று பெண்கள் பெயராகப் போட்டிருக்கீங்க?"

"ஆமாங்க...! அவங்களுக்கெல்லாம் மாப்பிள்ளை தேவை. ஒரு சின்ன விளம்பரமாப் போட்டு விட்டேன்!"

— தேனி. எஸ். மாரியப்பன்.

**ராஜாஜி வாழ்க்கை வரலாறு — IV**
**ராஜ்மோகன் காந்தி**



பத்திரிகைச் சட்டம் பற்றிய விவாதங்களுக்கு நாடாளுமன்றத்தில் பதிலளிக்கும் போது, ஸி. ஆர். சொன்னார்:

"இந்த விவாதத்தின் ஆரம்ப கட்டத்தில் மதிப்புக்குரிய ஓர் அங்கத்தினர், என்னைப் பிடிக்காததால் எனக்கு ஒரு கெட்ட பெயரைச் சூட்டக் கருதி, என்னைச் 'சாணக்கியன்' என்றார்..."

எச். வி. காமத் (இடைமறித்து): "அது ஒன்றும் கெட்ட பெயர் அல்ல!"

ஸி. ஆர்.: "சாணக்கியனைச் சிலர் விஷ்ணுகுப்தன் என்பார்கள்; சரித்திர ஆசிரியர்கள் கௌடில்யன் என்று அவனை அழைப்பார்கள். அது உன்னதமான பெயர்..."

காமத்: "மதிப்புக்குரிய பெயர்."

ஸி. ஆர்.: "ஆனால் மதிப்புக்குரிய அங்கத்தினரின் நோக்கம் என்னைப் பெருமைப் படுத்துவது அல்ல; என்னைச் சிறுமைப் படுத்துவதே! என்னுடைய அதிர்ஷ்டம், அவருக்கு அந்தச் சமயத்தில் ஒரு நல்ல பெயர் தோன்றி அதை வாய்விட்டுக் கூறிவிட்டார். இதற்காக நான் அதிர்ஷ்டதேவதைக்குத்தான் நன்றி கூற வேண்டும்!"

அவையில் ஒரே சிரிப்பு! மேஜையைத் தட்டி ஆரவாரம் செய்தனர்!

பத்திரிகைச்சட்டத்தையொட்டிஸி. ஆரை விமர்சித்த கோயங்கா, அவருக்கு ஒரு சர்வாதிகார மனம் இருப்பதாகக் குற்றம் சாட்டினார்.



குற்றம் சாட்டியவர்: கோயங்கா

ஸி. ஆர். சொன்னார்: "கோயங்காவுக்கு நான் கூறிக் கொள்கிறேன் — ஜனநாயகம் என்பது சதா பிரபலமடையும் பசியோடு இருப்பது அல்ல. நமது பிராபல்யம் பறிபோய் விடுமோ என்ற அச்சத்தோடு சதா வாழ்வதும் அல்ல. நியாயத்துக்கும் அநியாயத்துக்கும் இடையில் ஒரு யுத்தம் ஒவ்வொருவர் மனத்திலும் நடந்தாக வேண்டும். அந்த யுத்தத்தைச் சர்வாதிகாரத்துக்கான யுத்தம் என்று யாரும் தவறாகக் கருத வேண்டாம்."

குன்ஸ்ருவும் வேறு பலரும் ஸி. ஆரின் வாதங்களைக் கேட்ட பிறகு தங்கள் எதிர்ப்பை வாபஸ் பெற்றுக் கொண்டனர். கடைசியில் மூன்று அல்லது நான்கு பேர்

# நேருவின் தோழமையை ஏற்கலாம்; தலைமையை ஏற்பதா?

களே எதிர்த்து வோட்டு அளித்தனர். அவர்களில் தேசபந்து குப்தா ஒருவர். வோட்டெடுப்புக்குச் சில நிமிஷங்கள் முன் குப்தா ஒரு விஷயத்தை ஸி. ஆரின் கவனத்துக்குக் கொண்டு வந்தார். நாடாளுமன்றத்தின் அன்றைய அலுவல்கள், குறித்த காலகட்டத்துக்கும் மேலாக நீடிக்கப்பட்ட காரணத்தால் பத்திரிகை நிருபர்கள் அமரும் பகுதி காலியாக இருப்பதைச் சுட்டிக் காட்டிக் குறைப் பட்டார்.

"எதற்கு வருத்தப்படுகிறீர்கள்? இந்த விஷயத்திலும் பத்திரிகைகளுக்குச் சுதந்திரம் இருக்கத்தானே வேண்டும்!" என்று அவரை மடக்கினார் ஸி. ஆர்.

தில்லி சட்டசபை நடவடிக்கைகளை 1920-ஆம் ஆண்டுகளிலிருந்து கவனித்துச் செய்திகளாகத் தந்து வந்த துர்காதாஸ் சொன்னார்: "பத்திரிகைச் சட்டத்துக்கு ஆதரவாக ஸி. ஆர். நடத்திய விவாதங்களைப் போல், அத்தனை சிறப்பாக, மத்திய



''எழுபது பைசாவிலே அடையாறு ஆலமரம், மெரீனு பீச், அண்ணு சமாதி, கிண்டி பாம்புப் பண்ணை, வண்டலூர் மிருகக் காட்சி சாலை, மகாபலிபுரம், திருக்கழுக்குன்றம் எல்லாம் பார்த்துட்டுப் பாரிமுனை வந்தியா, எப்படி?''

''அண்ணு சாலையிலே ஏதோ ஊர்வலமாம். பல்லவன் ரூட்டை மாத்திவிருந்தாங்க!''

— அ. குமார்.

சட்டசபையின் சரித்திரத்திலேயே வேறு யாரும் எந்த விஷயம் குறித்தும் நடத்தியது கிடையாது!''

விவாதம் முடிந்து சட்டம் நிறைவேறிய ஒரு மாதத்தில், ஒரு விமான விபத்தில் குப்தா காலமானுர். அப்போது ஸி. ஆர். தமது பெங்களூர் நண்பர் ராமராவுக்கு எழுதினுர்:

''கல்கத்தா அருகே நடந்த விமான விபத்தானது, பத்திரிகைச் சட்டத்தை எதிர்த்துப் பேசியவர்களிலேயே மிக நியாயமாகவும் ஆணித்தரமாகவும் பேசிய ஒருவரைத் திடீரென்று நம்மிடமிருந்து பறித்துச் சென்றுவிட்டது. குப்தாவை நான் பல வருஷங்களாக அறிவேன். ஆனுல் அந்த விவாதத்தின் போது அவரை நான் வியந்து போற்ற ஆரம்பித்தேன். அதற்குள் பாருங்கள், அவர் ஓர் எலும்புக் குவியலாகிவிட்டார். பாவம், அவர் எவ்வளவு வேதனைகளை அனுபவித்தாரோ!''

**நே**ருவின் பண்பட்ட நடத்தையை ஸி. ஆர். பெரிதும் போற்றினுர். ஆனுலும் பட்டேலின் மரணம் இவ்விருவரிடையே நிலவிய உறவைப் பாதித்தது என்பதில் சந்தேகமேயில்லை. பட்டேலின் எதிர்ப்பைச் சமாளிக்க நேருவுக்குப் பக்கபலம் ஏதும் இப்போது தேவைப்படவில்லை. பட்டேல் — நேரு வேற்றுமைகளைச் சரிக்கட்டிச் சமாதானம் செய்து வைக்க ஒருவர் இப்போது தேவைப்படவில்லை. எனவே, நேருவுக்கு ஸி. ஆரின் முக்கியத்துவம் குறைந்து போயிற்று. ஸி. ஆர். வீட்டுக்கு அவர் போவதை அடியோடு நிறுத்திக் கொண்டார். இதனுல் ஸி. ஆரிடம் அவர் வைத்திருந்த மதிப்பு குறைந்து போனதாக எண்ண இடமில்லை. காரணமின்றி ஸி. ஆரை அடிக்கடி போய்ப் பார்த்துத் தொந்தரவு செய்ய வேண்டாம் என்று அவர் கருதியிருக்கலாம்.

ஆனுல் இந்த மாறுபட்ட சூழ்நிலையுடன் ஒத்துப் போவது ஸி. ஆருக்குக் கஷ்டமாக இருந்தது. அவருக்கு நேருவிடம் அன்பு, நல்லெண்ணம், நன்றியுணர்வு எல்லாம் இருந்தன. ஸி. ஆர். தான் இந்தியாவின் முதல் ஜனுதிபதியாக இருக்க வேண்டும் என்று நேரு விரும்பினுர் என்பதை அவரால் மறக்க முடியுமா? நேருவின் தூண்டுகோல்தான் பட்டேலின் ஆதரவுடன் தம்மை மீண்டும் தில்லிக்கு இழுத்து வந்தது. இப்போது உள்துறை அமைச்சராகவும் ஆக்கியிருக்கிறது என்பதைத்தான் ஒதுக்க முடியுமா? ஆனுலும் கூட நேருவை விடப் பதினெரு வயது மூத்தவர் ஸி. ஆர். என்பதையும் மறுப்பதற்கில்லை. அவருடைய தகப்பனுர் மோதிலாலுக்குத் தமது தோழமையை மட்டுமின்றிச் சில சந்தர்ப்பங்களில் தோழமையுடன் கூடிய எதிர்ப்பையும் அளித்தவர் ஸி. ஆர். அத்தகையவர் இன்று நேருவைத் தமது தலைவராக அங்கீகரிக்க முடியுமா? அத்தகைய ஒரு மனப்பான்மையை நேரு கொஞ்சம் கொஞ்சமாக வளர்த்துக் கொண்டு வரும்போது இவரது நிலை என்ன?

ஸி. ஆரின் மனம் இதனை ஒப்பவில்லை. சுதந்திரப் போராட்டத்தின் போது நேருவுடன் சம அந்தஸ்தில் நின்று நீண்ட காலம் போராடியவர் அவர். அந்த நினைவுகள் பசுமையாக இருந்தன. எனவே தலைவர் — தொண்டர் நிலைமையை ஏற்க அவரால் முடியவில்லை. இதனைச் சுயமரியாதை என்ற நற்குணமாகவும் போற்றலாம்; கர்வம் என்ற கெட்ட குணமாகவும் இகழலாம். எவ்வாருயினும் நேரு மந்திரிசபையில் பணியாற்றுவதில் ஸி. ஆருக்குத் திருப்தி படிப்படியாகக் குறைந்து கொண்டே வந்தது.

பெரிய அளவில் ஏதுமில்லா விட்டாலும் சில சிறிய கருத்து மாறுபாடுகள் தோன்றவே செய்தன. உதாரணமாக, ராஜ்காட்டில் காந்தி சமாதி எப்படித் தோற்றமளிக்க வேண்டும் என்பதில் இருவருக்கும் மோதல். இந்தக் கால கட்டத்தில் ஸி. ஆர். — நேரு ஆகியோருக்கிடையே பரிமாறிக் கொள்ளப்பட்ட கடிதங்களைப் பார்த்திருக்கிற அன்றைய உள்துறைக் காரியதரிசி எச். வி. ஆர். ஐயங்கார் சொல்கிறுர்: ''இருவருக்குமிடையில் இலேசாகத் தகராறு ஆரம்பமாவதை என்னுல் உணர முடிந்தது. ராஜாஜி எழுதி அனுப்பும் கருத்துக்களை நேரு தேவையின்றியே திருத்துவார்; மாற்றி எழுதுவார். இந்தத் திருத்தங்களால் கருத்தில் புதுமை ஏதும் இராது; அமைப்பில் முன்னேற்றமும் ஒன்றுமிராது. அடித்துத் திருத்த வேண்டும் என்பதற்காகவே திருத்தியது போலிருக்கும்!''

இந்தச் சமயத்தில்தான் நேருவுக்கும் ஜனுதிபதி ராஜேந்திரபிரசாத்துக்கும் இடையில் ஒரு தீவிரமான கருத்து மாறுபாடு கிளர்ந்தது!

(தொடரும்)



பம்பாய் சங்கரமடம் கட்டட நிதிக்காக ஸ்ரீமதி எம். எஸ். உதவிக் கச்சேரி நிகழ்த்திய போது சதாசிவம் தம்பதியுடன் பம்பாய்ப் பிரமுகர்கள். இடது கோடியில் கண்ணன்.

# பாரதி கண்ணனும், கல்கி கண்ணனும்!

திருமதி எம். எஸ். சுப்புலட்சுமி நடித்த 'பக்த மீரா' திரைப்படத்தைப் பார்க்கக் கொடுத்து வைத்தவர்களுக்கு ஒரு காட்சி இப்போதும் நன்ருக நினைவிருக்கும். பிருந்தாவனத்தை அடைய வழி நடந்து செல்லும் மீரா, ஒரு பாலைவனத்தைக் கடக்க நேர்ந்து, தாகத்தால் சோர்ந்து விழுந்து விடுவாள். அப்போது மாயக் கண்ணன் தோன்றிச் சிரிப்பான். அடுத்த கணமே இடையனாக மாறி, உள்ளங்கையில் நீர் ஏந்தி வந்து மீராவின் தாகம் தணிப்பான். புத்துணர்ச்சியுடன் எழுந்து, மீரா நன்றி கூறி நடையைத் தொடர்வாள். உருக்கமான இந்தக் காட்சியில் மாயக் கண்ணனாகத் தோன்றியது பிரபல நடனமணியும் நட்சத்திரமுமான பேபி கமலா. இடையனாகத் தோன்றிய இளைஞன் யார் என்பது யாருக்குமே தெரியாது. சதாசிவம் — திருமதி எம். எஸ். வீட்டில் ஊழியம் செய்து வந்தவன் அவன். அவன் பெயரில் மட்டும் ஒரு பொருத்தம் — கண்ணன்!

ஐம்பது ஆண்டுகளுக்கு முன் பத்து வயதுக் கண்ணன், 'எங்கிருந்தோ வந்தான்,' கல்கி அதிபர் சதாசிவம் வீட்டுக்கு. எப்படி வந்தான், யார் அழைத்து வந்து விட்டார்கள் என்பது கூட இன்று யாருக்கும் நினைவில்லை. 'கொடுத்த வேலை செய்கிறேன், சாப்பாடு போட்டால் போதும்' என்ருன். சதாசிவம் அவனுடைய களையான குழந்தை முகத்தைப் பார்த்து இரங்கினர். புகலிடம் தந்தார்.

கண்ணன், 'வீடு பெருக்கி, விளக்கேற்றுவான்; சொன்னபடி கேட்பான், துணிமணிகள் காப்பான்; சின்னக் குழந்தைகளுக்குச் சிங்காரப் பாட்டிசைத்து, ஆட்டம் காட்டி அழாமல் பார்த்திடுவான்; அவன் கற்ற வித்தை ஏதுமில்லை, ஆனல் நயவஞ்சனை புரியான்...' கருங்கச் சொல்வதெனில் பாரதியின் "கண்ணன் — என் சேவகனை" வரிக்கு வரி நினைவூட்டினன். ஒரே ஒரு வித்தியாசம்: அவன் மாயக்கண்ணன்; இவன் மானுடக் கண்ணன்.

பக்த மீரா திரைப்படம் எடுக்கப்பட்ட போது, கண்ணன் செய்த காரியங்களுக்குக் கணக்கு வழக்கில்லை. திரைப்படக் குழுவுடன் வட இந்தியா முழுவதும் சுற்றினன். காப்பி, டிபன் தயாரித்துப் பரிமாறுவது முதல் எடிட்டிங்கில் ஸ்ரீ பாதசங்கருக்கு உதவுவது வரை அவன் செய்யாத காரியமில்லை.

பார்த்தார் சதாசிவம். திறமைகளை எடை போடுவதில் அவருக்கு நிகர் யாருமில்லை. அப்போது கல்கி பத்திரிகைக்குப் பிளாக்குகள் தயாரிக்கும் பிரிவு உருவானது. அதன் நுணுக்கங்களைக் கற்றுவர பம்பாய்க்குப் பயிற்சிக்குக் கண்ணனை அனுப்பினர். கண்ணன் அதில் ஈடுபட்டிருந்த போதே கல்கி தீபாவளி மலர் தயாரானது. அதற்காக, 'என் சார்பில் அந்த விளம்பரதாரரைப் போய்ப் பார்; இந்த ஏஜென்ஸியிலிருந்து விளம்பர நகலைப் பெற்று அனுப்பு' என்று சதாசிவத்திடமிருந்து கண்ணனுக்கு உத்தரவுகள் பறந்தன.

கண்ணன் அயராமல் பணியாற்ற, சதாசிவம், தமது கணிப்புத் தவறவில்லை என்று கண்டு திருப்தி அடைந்தார். கண்ணனைக் கல்கியின் பம்பாய்ப் பிரதிநிதியாக்கி, கல்கி ஏஜென்ஸியையும் கொடுத்தார். அப்புறம் மளமளவென்று கண்ணன் வளர்ந்தான். ''கல்கி கண்ணன்'' ஆனன்.

பம்பாயில் இன்று கல்கி கண்ணனுக்குத் திறக்காத கதவு இல்லை, அவரால் அணுக முடியாத பெரிய மனிதர் இல்லை என்னுமளவுக்கு வளர்ந்திருக்கிறுர். இந்தச் செல்வாக்கு அதிகார பலத்தால் ஏற்பட்டது அல்ல; பணிவு, அடக்கம், உதவும் தன்மை, நட்பு, அன்பு போன்ற உயர்ந்த குணங்களால் அவரே சம்பாதித்துக் கொண்டது.

பம்பாயில், கல்கி கண்ணன் இல்லத்தில் போய்த் தங்காத, உணவருந்தாத தமிழகப் பிரமுகரே யாரும் கிடையாது எனலாம். இந்த விருந்தோம்பலுக்கெல்லாம் சதா மலர்ந்த முகத்துடன் ஒத்துழைப்புத் தந்து வந்துள்ளவர் திருமதி லக்ஷ்மி கண்ணன்.

சுதந்திராக் கட்சி தோன்றிய போது ராஜாஜி சார்பில் பல பிரமுகர்களை அவ்வப்போது பம்பாயில் சந்தித்துப் பல காரியங்களைச் சாதித்து வந்த கண்ணன், அவருடைய அன்பையும் ஆசிகளையும் பெற்றுர்.

பள்ளி சென்றறியாக் கண்ணன் பாரெல்லாம் சுற்றி வந்தார். கச்சேரிகள் நிமித்தம் ஸ்ரீமதி எம். எஸ்., அயல்நாட்டுப் பயணங்கள் மேற்கொண்ட போதெல்லாம் சதாசிவம் தம்பதியுடன் சென்று தேவைகளைக் கவனித்துக் கொள்வார். கல்கி காரியாலயத்துக்குப் புதிதாக அச்சு யந்திரம் வாங்க வேண்டுமா, கண்ணன் தான் ஜெர்மனிக்கோ, ஜப்பானுக்கோ போவார். விரைவில் அவரைக் கல்கி நிறுவனத்தின் பங்குதாரராகவே ஆக்கிக் கொண்டார் சதாசிவம்.

எந்த நண்பரை எப்போது சந்தித்தாலும், ''ஏதாவது வேணுமா? என்ன செய்யணும், சொல்லுங்கள்'' என்று கேட்கும் கண்ணனுக்கு, ஒரு பெரிய மனிதருடன் சில நிமிஷங்கள் பேசி, பத்திரிகைகளுக்கு அவரது நிறுவனத்தின் பல விளம்பரங்களைப் பெறுவது ஒரு பெரிய காரியமே அல்ல. ஒரு தில்லி நிறுவனத்தின் சார்பில் பேரம் பேச ஒருமுறை தமிழ்நாடு வந்து போனல், அந்த நிறுவனத்துக்குச் சில லட்சங்களை மிச்சப்படுத்திக் கொடுத்திருப்பார்.

இத்தகைய ஆற்றல் மிக்க கண்ணனுக்கு இன்று மணிவிழா. பரமாச்சார்யாளிடம் அளப்பரிய பக்திபூண்டு, ஜெயேந்திரரின் அன்பு கலந்த ஆசிகளைப் பெற்றுள்ள கண்ணனுக்கு இன்று வயது அறுபது. யாரையும் இலேசில் பாராட்டி விட மாட்டார் ராஜாஜி. அவரே ஒருசமயம், ''பி. ஆர். ஒக்களுக்காக ஒரு கல்லூரி உருவாக்கினல், அதன் முதல்வராக விளங்கத் தகுதி பெற்றவன் உங்கள் கண்ணன்'' என்று அந்தரங்கமாக சதாசிவத்தினிடம் சொன்னர். இந்தப் பாராட்டையே இன்று அறுபதாவது பிறந்த நாளின் மிகச் சிறந்த பரிசாகக் கண்ணனுக்குப் பகிரங்கமாக வழங்குகிறேம்!

— கி. ராஜேந்திரன்

# அடுத்த இதழ்...

**நீலகிரி மாவட்டத்தில்**
**கல்கி — II**

* **நீலகிரிக்கும் அபாயம்!**
— கவர் ஸ்டோரி



* சில சட்சட் சந்திப்புகள்



* **''ஒன்றிரண்டு குறைகள் இல்லாமல் இல்லை!''**
— நீலகிரி மாவட்டக் கலெக்டர் பேட்டி!



பாடசாலை வித்யார்த்திகளின் ஒரு பகுதி

மஹான் ஸ்ரீ கோவிந்த தீக்ஷிதரவர்களால் 1542ல் ஸ்தாபிக்கப்பட்டு தொடர்ந்து நடந்து வரும் வேத பாடசாலையை மேற்படி ஸமிதியானது தாய் போல் இயங்கிக் காப்பாற்றி வருகிறது. தற்போது பாடசாலையில் 85 மாணுக்கர்கள் வேதாத்யயனம் செய்து வருகின்றனர். அவர்களுக்கு ஒரு நாள் உணவளிக்க சுமார் ரூ 250/– ஆகிறது. இந்த தர்மம் நிரந்தரமாய் நடக்க ரூ 2500/– மூலதனம் ஏற்படுத்தியோ அல்லது அவ்வப்போது ரூ 250/– அனுப்பியோ ஒரு குறிப்பிட்ட தினத்தில் உணவளிக்கும் கைங்கர்யத்தில் பங்கு கொள்ளக் கோருகிறோம்.

நன்கொடை அனுப்ப வேண்டிய பெயரும் முகவரியும்;

**அத்வைத வித்யாசார்யா மஹா ராஜா ஸாஹேப்**
**ஸ்ரீ கோவிந்த தீக்ஷிதர் புண்ய ஸ்மரண ஸமிதி**
**D–76, மூன்றாவது கிராஸ் தெரு, ஸ்ரீநகர் காலனி,**
**கும்பகோணம்–612 001.**

**இந்த நன்கொடைக்கு 80G விதியின்படி வருமான வரிவிலக்கு உண்டு.**



* ஜேப்பியாரானந்தா

# 'எம். ஜி. ஆர். மதம்' வரப்போகிறதா?

* வலங்கை ஜி. ராஜசேகர், வளையமாபுரம்.

? 'ஏசு, முகமது நபி, காந்தி போன்றவர்களைப் போல் எம். ஜி. ஆரும் ஒரு தெய்வம். எனவே, அவர் பெயரில் எம். ஜி. ஆர். மதம் என்று ஒன்று தொடங்கி நடத்தப் போகிறேன்' என்று ஜேப்பியார் பேசியிருக்கிறாரே?

! துறவி ஜேப்பியாரானந்தா கோலத்தில் ஜேப்பியாரைக் காணக் காத்திருக்கிறோம். வருமானம் ஒன்றும் குறைந்துவிடாது. நம்பிக்கையுடன் காரியத்தில் இறங்கலாம் என்று தைரியமளிக்கிறோம்!

* கே. வி. எஸ். மணியன், குடியாத்தம்.

? குளியலறையில் தவறி விழுந்து விட்டதற்காகவா இத்தனை விசாரிப்புகள்?

! விசாரிப்புகள் ஒருபுறம் கிடக்கட்டும்; ராஜ்பவனில் உள்ள பாத்ரூம் கூட ஆளை வழுக்க வைக்கிற அவலத்தில்தான் இருக்கிறது என்பது எத்தனை பெரிய வேடிக்கை!

* ஆர். வசந்தகுமார், கும்பகோணம்.

? நாயகன் படத்தில் பாலகுமாரன் தெரியவே இல்லையே?

! வேர்கள் எப்போதும் வெளியே தெரிவதில்லை. அதற்காக வேர்களே இல்லை என்று அர்த்தம்? இங்கே கண்ணுக்குத் தெரியாமல் இருப்பதால்தான் பாலகுமாரன் வெற்றி பெற்றவராகிறார். தம்மை அவர் முன்னிலைப் படுத்தியிருந்தால் படம் இந்த அளவுக்கு வரவேற்புப் பெற்றிருக்க முடியாது.

* இரா. வளையாபதி, தோட்டக்குறிச்சி.

? 'கொள்கை ரீதியாக இடதுசாரிச் சிந்தனைக்கும் வலதுசாரிச் சிந்தனைக்கும் வித்தியாசம் ஒன்றுமில்லை' என்று கர்நாடக முதல்வர் ஹெக்டே கூறியிருப்பதை ஏற்றுக் கொள்கிறீர்களா?

! வித்தியாசம் இருக்க வேண்டும்; ஆனால் இந்தியாவில் அப்படி இல்லை என்ற அர்த்தத்தில்தான் ஹெக்டே பேசியிருக்க வேண்டும். ஏனெனில், வலதுசாரிக் கொள்கைகளும் சிந்தனைகளும் பழைமையானவை; புதுமைகளை உரைத்துப் பாராமல் அத்தனை சுலபத்தில் ஏற்றுக் கொள்ளாதவை. இடதுசாரி என்பதோ புதுமைகளையும் புரட்சிகரமான கொள்கைகளையும் கொண்டது; ஏற்றுக் கொள்ளக் காத்திருப்பது. இந்நிலையில் இரண்டுக்கும் வித்தியாசம் இருப்பது தானே நியாயம்!

* ஆர். இராஜதுரை, சீர்காழி.

? ரிலையன்ஸ் கோப்பை கிரிக்கெட் போட்டியில் இந்தியா வெற்றி பெறாதது பற்றி?

! இந்தத் தோல்வியினால் ஏற்பட்ட வருத்தத்தைத் தூக்கிச் சாப்பிடும் இன்னொரு வருத்தம் வந்ததுதான் அவலம். ஆம்; பாகிஸ்தான் தோல்வியடைந்தபோது, இந்துக்கள் பட்டாசு வெடித்துக் குஷிப் பட்டுக் கொண்டதும், பிறகு இந்தியா தோல்வியடைந்த போது முஸ்லிம்கள் பட்டாசு வெடித்துக் குஷிப்பட்டுக் கொண்டதும் — துப்பாக்கிச் சூடு நடந்ததும் எத்தனை அசிங்கம்! இதுமாதிரியான விளையாட்டுப் போட்டிகள் அனைவருக்கும் ஓர் உற்சாகத்தையும் நேசத்தையும் வளர்க்கத்தான் நடத்தப்படுகின்றன என்றதோர் உயரிய நாகரிகம் தோல்வியடைந்து விட்டதே!

* கே. கணேஷ், சென்னை — 6.

? 'பொறுத்தார் பூமி ஆள்வார்' — உதாரணம் தந்து விளக்கவும்.

! இன்டலா? அ. இ. அ. தி. மு. க. விலுள்ள



* கண்ணுக்குத் தெரியாமல்...



* இடம் — வலம்



* ரசிக்கும் இடம்



* ஜெனிமாத்துறை ஆதரவு

யாரை வேண்டுமானாலும் கேட்டுப் பாருங்கள், அற்புதமாய் விளக்கம் சொல்வார்கள்.

*** சி. மணி, புத்தனாம்பட்டி.***

**? வி. பி. சிங்கிற்கு பம்பாய்த் திரைப்பட உலகம் ஆதரவளிக்க முடிவு செய்திருப்பது பற்றி?**

! ஆக, அங்கே வரி பாக்கியில்லாதவர்கள், கறுப்புப் பணமில்லாதவர்கள் நிறையப் பேர் இருக்கிறார்கள் போல் இருக்கிறது. அதனால்தான் அவர்கள் வி. பி. சிங்கை ஆதரிக்கும் அளவுக்குத் துணிச்சல் பெற்றிருக்கிறார்கள் போலும்!

*** திருமதி ஜி. ராணி குமார், சென்னை — 11.**

**? டி. வி. யில் ஒளிபரப்பாகும் 'மால்குடி டேஸ்' தொடர் பார்க்கிறீர்களா?**

! ரசிக்கக் கூடிய இடங்கள் ஏராளம் என்பதால் தவறாமல் பார்க்கிறேன். உதாரணத்திற்கு... அந்தக் கிராமத்தான் வேலை தேடி மால்குடியை நோக்கி நடந்து போகிறான். வழியில் குடும்பக் கட்டுப்பாடு பிரசார வேனை ஓட்டிக் கொண்டு வரும் ஆசாமி அவனைப் பார்க்கிறான்; லிப்ட் கொடுக்கிறான். முதன் முதலாக மோட்டார் வண்டியில் ஏறிச் செல்லும் பெருமிதம் கிராமத்தானுக்கு. வண்டியோட்டிக்கோ, கு. க. வுக்கு ஓர் ஆள் கிடைத்துவிட்ட சந்தோஷம். எழுதிய ஆர். கே. நாராயணனும் சரி, அந்த உணர்ச்சிகளைப் படம் பிடித்தவரும் சரி, நிச்சயமாகப் பாராட்டுக்குரியவர்களே.

*** ஆர். கோபாலகிருஷ்ணன், சென்னை — 29.**

**? மண்டேலா ஆயுதம் தாங்கிப் போராடியதன் காரணமாகத்தான் வெள்ளை நிற வெறி அரசு அவரைச் சிறையிலடைத்தது. இந்நிலையில் மண்டேலாவை அகிம்சாவாதி என்று நீங்கள் எப்படிச் சொல்லலாம்? அது தவறானதல்லவா?**

! மண்டேலா தமது அகிம்சா முறைப் போராட்டத்தைத் தொடங்கியபோது, தென்னாப்பிரிக்க அரசு அவர் மீது கண்மூடித்தனமாக ஆயுதங்களைப் பிரயோகித்தது. எனவே, அவர் தமது அகிம்சா வழியைச் சிறிது தளர்த்தி ஆயுதங்களைக் கையிலெடுத்துப் போராடினார் என்பது உண்மைதான் என்றாலும், அவருடைய ஆயுதங்கள் எதிராளிகளின் — எதிரிகளின் உயிரைக் குடிக்க உபயோகப்படுத்தப்படவில்லை; மாறாக, உயிர்ச் சேதம் ஏதும் ஏற்படாமல் ராணுவக் கிடங்குகளைத் தகர்ப்பது, அரசு உடைமைகளைக் குண்டு வைத்துத் தகர்ப்பது என்றுதான் உபயோகப்படுத்தப்பட்டன. இந்நிலையில் மண்டேலாவின் போராட்டத்தை விடுதலைப் புலிகளின் போராட்டத்தோடு ஒப்பிடச் சொன்னால் எப்படி ஒப்பிட



முடியும்?

*** ஆர். மருதசாமி, மயிலாடுதுறை.**

**? விடுதலைப்புலிகளுக்காகக் குடம் குடமாகக் கண்ணீர் விடும் நமது தமிழகத் தலைவர்கள், பலியாகிய அமைதிப் படை வீரர்களுக்காக — ஒட்டுமொத்தமாக இல்லாவிட்டாலும் அதில் பலியான தமிழ் வீரர்களுக்காகக் கூட சொட்டுக் கண்ணீர் விட மாட்டேன் என்கிறார்களே, இது என்ன வகைத் தமிழ் உணர்வு?**

! அதுதான் சந்தர்ப்பவாதக் கண்ணீர்; சந்தர்ப்பவாதத் தமிழ் உணர்வு என்பது. இதைச் சொன்னால், நீங்களும் நானும் தமிழினத் துரோகிகள் என்றுதான் வர்ணிக்கப்படுவோம்.

*** எஸ். செந்தில்குமார். திருமருகல்.**

**? என்ன போஃபர்ஸ், ஃபேர்பாக்ஸ் பற்றி ஒரு சத்தத்தையும் காணோமே?**

! 'ஒரு விஷயத்தை அமுக்க வேண்டுமானால் ஒன்று கல்லைத் தூக்கிப் போட வேண்டும்; அல்லது கமிஷன் போட வேண்டும்' என்று அந்தக் காலத்திலேயே எழுதியிருக்கிறார் அமரர் கல்கி. இப்போது இவற்றுக்குப் பார்லிமெண்டரி கமிட்டி என்று ஒன்றைப் போட்டு அமுக்கியிருக்கிறார்கள்; பார்ப்போம். கல்கி சொன்னது இவ்விஷயத்தில் பொய்யாக வேண்டும் என்பதே நமது விருப்பம்.

*** க. பிரகாஷ், அருப்புக்கோட்டை.**

**? ஏதோ வேளாண்மைப் படிப்புப் படித்தால் அனைவருக்கும் வேலை வாய்ப்புக் கிடைத்துவிடும் என்று கடந்த 25.10.87 இதழில் சொல்லியிருக்கிறீர்கள். ஆனால் அரசின் மெத்தனப் போக்குகளால் இதுவரை சுமார் தொள்ளாயிரம் வேளாண் பட்டதாரிகள் வேலையில்லாமல் இருக்கிறார்கள், தெரியுமா?**

! நீங்களே சொல்லி விட்டீர்கள் வேளாண் பட்டதாரிகளுக்கு வேலையில்லாமல் இருப்பதற்கு அரசின் மெத்தனப் போக்குகள்தான் காரணம் என்று. மேலும் முழுக்க முழுக்க விவசாய நாடான நம் நாட்டில் வேளாண் பட்டதாரிகள் வேலையின்றி இருப்பதை விடப் பெரிய அவமானம் நமது அரசுக்கு ஏதும் இல்லை.

* ரூ. 15 பரிசு பெறுபவர்:
சி. மணி,
1 — 80, மெயின் ரோடு,
புத்தனாம்பட்டி அஞ்சல்,
திருச்சி மா. வ. — 621 007.



• ஏவி. எம். சரவணன்

• நீலகண்டன்



# ஜம்போ வங்கி அல்ல; ஜம்மென்று ஒரு வங்கி!

ஜம்போ விமானங்கள் அறிமுகமான புதிது. ஏவி. மெய்யப்பன் அவர்கள் அதில் பயணம் செய்ய விரும்பி டோக்கியோவில் ஜப்பான் ஏர்லைன்ஸ் டிக்கெட் வாங்கியிருந்தார். ஆனால் கடைசி நேரத்தில் ஏதோ காரணத்துக்காக ஜம்போ ரத்தாகி வழக்கமான 707 விமானம்தான் என்று கூறிவிட்டார்கள். மெய்யப்பன், "ஜம்போவில் பறக்க விரும்பித்தானே உங்கள் விமான சர்வீஸில் டிக்கெட் எடுத்தேன்? இல்லையெனில் ஏர் இந்தியாவிலேயே போயிருப்பேனே" என்று வாதாடினார். அவரது சூட்டைத் தணிக்கும் விதமாக ஜப்பான் ஏர்லைன்ஸ் அதிகாரியான ஒரு பெண்மணி இப்படி பதில் சொன்னார்: "ஜம்போவில் பறப்பது ஒரு புதுமையாக இருக்கலாம்; ஆனால் அது ரொம்பப் பெரிசு; பயணிகளோ மிக அதிகம்; அதனால் உபசரிப்பு திருப்திகரமாய் இராது. 707 சிறிதானாலும் பயணிகள் குறைவானதால் நல்ல கவனிப்பு, உபசரிப்பு இருக்கும்!"

மெய்யப்பன் சிரித்து விட்டார். இந்தச் சாமர்த்தியமான பதிலை ஏற்றுப் பயணம் செய்தார். ஜம்போவில் பறக்கும் ஆசையை வேறு ஒரு சமயம் பூர்த்தி செய்து கொண்டார். அப்போது அவருக்குத் தோன்றியது: "அடடா! அந்த ஜப்பானியப் பெண்மணி அன்று கூறியது ஒரு சாதுர்யப் பேச்சு என்று கருதிச் சிரித்தோமே; ஆனால் அதில் உண்மை இருப்பதாக அல்லவா தெரிகிறது!"

தந்தை விவரித்த இந்த அனுபவத்தை மகன் ஏவி. எம். சரவணன் நினைவு கூர்ந்தார். தொடர்ந்து சென்னை ஷெரீப் சொன்னார்: "வங்கி சிறிதாக இருக்கிறதே என்று வாடிக்கையாளர்கள் யோசிக்க வேண்டாம். இங்குதான் கவனிப்பு அதிகமாக இருக்கும்" என்று.

நிகழ்ச்சி: மயிலையில் பாங்க் ஆஃப் தமிழ்நாடு புதிய அலுவலகத் திறப்பு விழா.

சரவணனின் கருத்தை மேலும் உறுதிப்படுத்தும் வகையில் அமைந்திருந்தது வங்கியின் சேர்மன் நீலகண்டனின் பேச்சு. "அரசுடைமையான வங்கிகளில்தான் நமது பணம் பத்திரமாக இருக்கும் என்று பலர் எண்ணுகிறார்கள். இது தவறான கருத்து. அரசுடைமையான வங்கிகளுக்கு என்னென்ன கட்டுப்பாடுகள் உண்டோ அத்தனை கட்டுப்பாடுகளும் தனியார் வங்கிகளுக்கும் உண்டு. டெபாஸிட்களில் கிட்டத்தட்ட பாதி அளவை ரிஸர்வ் வங்கியில் செலுத்தவும் அரசாங்கப் பத்திரங்களை வாங்கவுமே ஒதுக்க வேண்டும். மீதியைத்தான் கடனாக வழங்கலாம். டெபாஸிட்தாரர்களுக்கு இழப்பு ஏதும் நேரக் கூடாது என்பதற்காக அரசுடைமை வங்கிகளைப் போலவே நாங்களும் டெபாஸிட் இன்ஷியூரன்ஸ் செய்கிறோம். ஆக மொத்தம் அரசு வங்கிக்கும் இதற்கும் வித்தியாசம் என்னவெனில் அரசு வங்கிகள் மிகப் பெரிதாக வளர்ந்து விட்டதாலேயே வாடிக்கையாளருக்குப் போதிய அளவு கவனிப்பைத் தர முடியவில்லை. நாங்கள் நாளுக்கு நாள் வளர்ச்சியுற்று வந்தாலும் அரசுடைமை வங்கிகளுடன் ஒப்புநோக்க அளவில் சிறுத்திருப்பதால் வாடிக்கையாளரின் தேவைகளை நன்றாகக் கவனிக்க முடிகிறது."

தமிழினப் பற்றுடையவர்களுக்குச் சிறப்பாக ஒரு விஷயம் சொன்னார் நீலகண்டன்: "மற்ற வங்கிகளில் டெபாஸிட் செய்தால் அந்தப் பணம் இந்தியாவின் பல பாகங்களிலும் பரவலாகத் தொழில் வளத்துக்கு உதவலாம். ஆனால் பாங்க் ஆஃப் தமிழ்நாடு அதிகபட்சமான கிளைகளைத் தமிழ்நாட்டில் மட்டுமே கொண்டிருக்கிறது. அதனால் இதில் டெபாஸிட் செய்யப்படும் பணம் தமிழகத்தின் தொழில் வளர்ச்சிக்கே மிக அதிகமாகப் பயன்படும்!"

எனவே, தமிழ் உணர்வும் தமிழினப் பற்றும் உள்ளவர்கள், அவர்கள் உலகில் எந்தத் திக்கில் இருந்தாலும் சரி, இருக்கிற பணத்தைத் திரட்டி எடுத்துக் கொண்டு பாங்க் ஆஃப் தமிழ்நாடு மயிலைக் கிளையின் புதிய காரியாலயம் நோக்கிப் பெருமிதத்துடன் செல்வார்களாக!

— குமரன்

பரதன் அச்சகத்தில் அச்சிட்டவர் வி. முரளி. பரதன் பப்ளிகேஷன்ஸ் பிரைவேட் லிமிடெட் சார்பாக வெளியிட்டவர் வி. வைத்தியநாதன். ஆசிரியர்: கி. ராஜேந்திரன்.
நிர்வாகக் காரியாலயம்: ரேஸ்கோர்ஸ் சாலை, கிண்டி, சென்னை — 600 032. போன்: 431543, 434157.
ஆசிரியர் குழு அலுவலகம்: 28, ஐந்தாவது தெரு, ஏரி வட்டம், நுங்கம்பாக்கம், சென்னை — 600 034. போன்: 473389.
ஆண்டுச் சந்தா — உள்நாடு: ரூ. 104/-; வெளி நாடு: கப்பல் தபால் ரூ. 280/-; விமானத் தபால் ரூ. 680/-.
ஆறு மாதச் சந்தா — உள்நாடு: ரூ. 52/-; வெளி நாடு: கப்பல் தபால் ரூ. 140/-; விமானத் தபால் ரூ. 340/-.

REGISTERED No. M. 4392
Registered as a Newspaper in Sri Lanka

# பிலிப்ஸ்









## பிலிப்ஸ் வீட்டுபயோக சாதனங்கள்...



பிலிப்ஸ் குடும்பத்தின் வீட்டுபயோக சாதனங்களைப் பாருங்கள்: பிலிப்ஸ் குவார்ட்ஸ் சுவற்றுக் கடியாரங்கள் மற்றும் அலாரம் கடியாரங்கள். பிலிப்ஸ் எலெக்ட்ரிக் இஸ்த்திரிப்பெட்டி—இலேசான எடை. ஆட்டோமேட்டிக்! பிலிப்ஸ் இன்ஃப்ராஃபில். பிலிப்ஸ் மிக்ஸர் கிரைண்டர்—அத்துடன் விருப்பத் தேர்வுக்கான அட்டாச்மெண்ட்டுகள். ஒரு சென்ட்ரிஃப்யூகல் ஜூஸர் மற்றும் டிரை கிரைண்டர்.




அத்துடன் பிலிப்ஸின் புதிய சாதனம்—சிட்ரஸ் பிரஸ்: கணத்தில் சாறு பிழிய.

வாருங்கள் பிலிப்ஸ் குடும்பத்திற்கு! வாங்கிச் செல்லுங்கள் உங்கள் வீட்டிலே அற்புதமாய் செயலாற்றக் கூடிய சாதனங்களை.

...அவை உங்களோடு வாழ்நாள் முழுதும் வாழும் மங்களமாய்!



**பிலிப்ஸ் எனும்போது தரம் பளிச்சிடும்.**